# கவியரசர் கண்ட கவிதை

243

(2)

வங்காளக் கவிஞர்
இரவிந்திரநாத தாகுர் இயற்றிய
120 பாடல்களின் தமிழ் வடிவம்

தமிழ் அமைப்பு:
அ. சீநிவாசராகவன்,
பேராசிரியர், முதல்வர், வ. உ. சி. கல்லூரி, தூத்துக்குடி



மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட்
மதருஸ் பம்பாய் கல்கத்தா லண்டன்
1963

TO

PROF. HUMAYUN KABIR
FRIEND OF ALL LANGUAGES
AND CULTURES

பண்பாடு எதற்கும், பற்பல மொழிக்கும்
நண்பனும் அறிஞன் ஹுமாயூன் கபீர்க்கு

# அறிமுகம்

நண்பர், பேராசிரியர் அ. சீநிவாசராகவன், எதிர்காலத்தில் பழுத்தினிக்கப்போகும் பிஞ்சு மனங்களோடு உறவாடி அவற்றை வளர்க்கும் பேறு பெற்றவர். அப் பிஞ்சு மனங்களின் தெய்வத்துடிப்பினை அறிந்தவர். ஆங்கிலப் பேராசிரியராகப் பணிபுரிந்ததில், தலைமுறை தலைமுறையாய்ப் பாட்டிற் பழகிய தமிழ் மனம், ஆங்கிலக் கவியின் ஆழத்தையும் தமிழ் வழியே காட்டினால், சுவைத்து முன்னேறும் என்ற உண்மையை உணர்ந்தவர். ஆங்கிலச் சுவையோடு செந்தமிழ்த் தீஞ்சுவையைக் கூட்டிக் குழைத்து ஊட்டி வரும் சிறந்த பணியில் பல ஆண்டுகளாக ஈடுபட்டவர். 'நாணல்' என்ற புனை பெயரில், நாணலைப் போலக் கவிழ்ந்து கொடுத்து, வெள்ளத்தை எல்லாம் எதிர்த்து, வெள்ளமெலாம் மறைந்தும், மறையாது நிற்கும் தமிழ்க் கவிதைப் படைப்பில் தழைக்கின்றவர். எதிர்கால உலகம் வாழவேண்டி, இன்று அவர் ஒரு புதுப் படையலை, செந்தமிழ்த்தாய் உள்ளங்குளிர அமைத்து எதிரே வைக்கின்றார்.

மொழிபெயர்ப்பும் ஒரு புதுப்படைப்பே. புதுப்படைப்பினும் அரியது மொழிபெயர்ப்பு. ஒரு கவிஞனது உள்ளம் ஒரு மொழியின் உயிரோட்டமாக உருக் கொண்டதனை, மற்றொரு மொழியின் உயிரோட்டமாக வேறொரு கவிஞன் உருக் கொடுப்பதுவே, கவிதையின் உண்மையான மொழிபெயர்ப்பு. இது ஒரு கவிதைப் பெருஞ்சித்து. இந்நாளில், சித்தனான பாரதிக்கும் கைவராத இந்தச் சித்து, கவிமணிக்கு வாய்த்திருந்தது. நண்பர் 'நாணலு'க்கும் வாய்த்துள்ளது. பல மொழி

இலக்கிய வெள்ளத்திடையே திளைத்து வாழ்ந்ததன் பயன் இது. கவிமணியைப் போலவே, முதல் நூலை எளிதாக்கி, இனிதாக்கி, அதன் உயிராக்கம் குன்றாமல் பாடியுள்ளார் நண்பர் சீநிவாச ராகவன். முதல் நூலினும் இனிக்கின்றது என் தமிழ்க் காதுக்கு இவருடைய தமிழ்.

கவிஞர் தாகுரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடு கிறோம். அவர் திருவடிக்குப் பலப்பல மலர்களை அன்பர்கள் கொண்டு வருகின்றார்கள். நண்பரோ, தாகுரின் கவிதை களையே அழியாத தமிழ் மாலையாகச் சூட்ட வருகின்றார். மாலையைக் கண்டு மகிழ்ந்தேன். அதன் தேனைச் சுவைத்து இன்புற்றேன். இல்லை, உண்மையைச் சொல்லட்டுமா? சூடிக் கொடுத்த நாச்சியார் போல, என் காதலன் தாகுருக்கு, இது உகக்கும் என்று களித்துச் சூடி உளங்களித்தேன். சாத்தன் கோயிலில் தேவந்திகை போல, தாகுர் கோயிலில் என்னைப் பூசாரியாக நிறுத்தி இந்த மாலையை உலகோர் எதிரில் சூட்டச் சொல்கின்றார் நண்பர். சூடிப்பார்த்த நான் சூட்டுவதும் என் பேறே. மாலையில் எந்தப் பூவை நடுமலராக அமைப்பது? எதனை எடுத்துக் காட்டுவது? எல்லாம் இன்பக் கவிதைத் தமிழ் மலரே. வேண்டுமானால், இளைஞர் மனம் காண விழையும் ‘ ஊர்வசி ’ என்ற பாடலின் ஒரு பகுதியை இங்கே பார்க்கலாம். எல்லையற்ற அழகின் தனி வடிவமாகக் கவிஞர் தாகுர் கண்ட ஊர்வசி, கற்பக நாட்டில், அமரர் முன்னே நடனமாடுகிறாள். அப்போது, இங்கே இந்த உலகில் தோன்றும் காட்சியை, தாகுர் கண்டபடி ‘ நாணலி ’ன் தமிழ் பேசுகிறது.

ஆனந்த சாகரத்தில், அமரர் முன்னே,
அழகலையே, ஊர்வசி, நீ ஆடும்போது,
தானந்த தனத்த வெனத் தாளம் கொட்டித்
தரங்க நடுப் பெருந்திரைகள் தாவி ஆடும்.
கூனி முதிர் நெற்கதிரின் உச்சிமேலே,
குதித்து அனுங்கும் நிலமகளின் பச்சைச் சேலே.
வான்வெளியில் உன் காறை தெறித்த வைரம்
வண்ண ஒளித் தாரகையாய்த் துள்ளி வீழும்.

தன்னேயே ஒரு நொடியில் மறந்து நிற்கும்
தாபத்தில் துடிக்கின்ற மனித உள்ளம்.
மின்னலெனச் சிவ்வென்று நரம்பில் எங்கும்
மீறி எழும் உயிர் விறலாய்க் குருதி பொங்கும்.
தன்னிச்சைப் போக்கினிலே வரம்பே இன்றித்
தழைக்கின்ற சுதந்திரத்தின் வெறியே, உன்தன்
பொன் திணிந்த மேகலே உன் நடனமாயப்
புயல் எறியத் தொடுவானில் பிதிர்ந்து சிந்தும்.

இந்த உலகத்திற்கே ஊர்வசி வந்து விட்டாலோ?

தாவில்தம் சிந்தையெலாம் தகர்க்கும் உன்தன்
சதிர் எழிலே தஞ்சமென, தவத்தால் பெற்ற
யாவையும் உன் பொன்னடியில் வைப்பார், வைத்துப்
புகலென்னத் தவம் கிடப்பார் முனிவர் யாரும்.
மூவுலகும் சலிக்கும் உன்தன் கடைக்கண் வீச்சில்;
மூவாத இளமை வெறி மூளும். காற்ருே
தாவி அலேந்து அந்தகனுய் உன்னேத் தேடித்
தரியாதுன் நறுமணத்தை எங்கும் தூவும்.

ஆராத மது மயக்கின் அளியே போல
அங்கங்கே உனது அழகின் சாயல் கண்டு,
தீராத பெருங்காதற் பசியில் தீய்ந்து,
திரிதந்து, பித்தேறி, தேடித்தேடி,
பாரெங்கும் உனைவாழ்த்திப் பாடிப் பாடிப்
பரவசத்தில் ஆழ்கின்றான் கவிஞன்; நீயோ
ஆர் சதங்கை அலம்பப் பொன் ஆடை ஆட
அலை மின்னல் போல் எங்கோ அலைகின்றாயால்.

ஆழ்வார்கள் நாயன்மார்கள் பாடலில், கம்பன் பாடலில், பாரதியின் பாடலில் பழகிய உள்ளம், இந்தக் கவிதைத் தமிழிலேயே தாகூரையும் காண வகை செய்த நண்பர் வாழி, அவர் நூல் வாழி, தமிழ் வாழி.

அண்ணாமலைப்
பல்கலைக் கழகம்.
11-3-1962.

இங்ஙனம்,
தெ. பொ. மீனாட்சிசுந்தரன்

## தாகுருடைய கவிதை

குருதேவருடைய நூற்றெண்ருவது பிறந்த நாள் 1961ஆம் ஆண்டு மே மாசம் கோலாகலமாகக் கொண்டாடப்பெற்றது. அவர் எண்பத்தொரு வருடங்கள் வாழ்ந்தார். இதில் ஏறக் குறைய அறுபத்தாறு ஆண்டுகளுக்கு, இடையருத இலக்கியப் பெருவெள்ளமாக அவருடைய வாழ்க்கை அமைந்தது. சிறு கதை, நாவல், கட்டுரை, நாடகம், கவிதை, இசைப் பாடல், காவியம் எல்லாத் துறைகளிலும் அவர் கற்பனே மலர்ந்தது. இந்த அரிய சாதனேயின் உயர்வு முழுவதையும், ஒரு கட்டுரை யால் அளந்துவிட முடியாது. அவருடைய கவிதையை ‘ஒரு பானேச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்’ என்ற கணக்கில் ஏதோ சிறிது இங்கே பார்க்கலாம்.

அவரை எண்ணும் போது, முதலில் தோன்றுவது அவர் ஒரு மகரிஷியைப்போல் வாழ்ந்தார், பேசினுர் என்பதுதான். பாரதநாட்டின் தத்துவ ஒளி அவர் கவிதையில் எங்கும் படி கிறது. மனிதனுடைய ஆசைகள், சஞ்சலங்கள், போராட்டங் கள் இவற்றுக்கு முடிவுண்டா? இவற்றிலே அழுந்தி, ஓயாத செயல்களில் சிக்குண்டு, தடுமாறி வருந்தும் மனிதனுக்கு, இந்த வாழ்க்கைக்கு அப்பாலிருந்து, இதற்கு ஆதாரமாய் இயங் கும் சத்தியப்பொருள் எவ்வாறு தென்படும்? இவனேப் பார்த்து, குருதேவர் பேசுகிருர்: ‘ அப்பனே, நீ என்ன செய்கிருய், தெரி கிறதா? நான், நான், நான் என்று பேய் போல அலேகிருய். எல்லாம் உன் வலிமையால் சாதிக்கமுடியும் என்று எண்ணு கிருய். எத்தனே நாளுக்கு இப்படி உன்னேயே தூக்கிக்கொண்டு சுற்றப் போகிருய்? எத்தனே நாளேக்கு உன் கையையே எதிர்

பார்த்து உன் வாசலிலேயே பிச்சைக்காரனாக நிற்கப் போகிறாய்? விட்டு விடு, தம்பி, இதையெல்லாம் விட்டு விடு. எல்லாம் அவன் பாரம் என்று இருக்கப் பழகு. உன் ஆசையின் மூச்சுப்பட்டால் எந்த ஒளியும் அணைந்து போகும்; உன் ஆசை பற்றினால் இந்த உலகமே வெறும் ஊன்காடாகி விடும். அவன் அருள் ஒன்றையே எண்ணி வாழக் கற்றுக்கொள்.'

உன் தோளில் உன்னையே தூக்க முயல் பேதையே,
 உன் வீட்டு வாசல் நின்றே
உன்னையே நோக்கி இருகை ஏந்திப் பிச்சையென
 உழல்கின்ற ஏழையே கேள்:
உன் பாரம் அத்தனையும் அவன் பாரம் என்று விடு,
 ஒரு கவலை இல்லாதிரு.
உன் பாரம் உலகத்தின் பாரம் எல்லாம் அவன்
 ஒருவனே தாங்க வல்லான்.

உன் ஆசைப் பேய் மூச்சு விட்டதும் விளக்கிலே
 ஒளிச்சுடர் அவிந்து போகும்.
உன் ஆசை இறைவனுளம் உணராத ஊன் காட்டில்
 ஊறிடும் ஊத்தை ஆகும்.
உன் ஆசை மாசுற்ற கையினால் எதனையும்
 ஒரு போதும் பற்றிடாதே.
எந்நாளும் அவன் கருணை அருள்வதே போதுமென
 இருக்க நீ மறந்திடாதே.'

'வாழ்க்கைக் கடலில் எறிபட்டுத் தவிப்பதை விடுத்து, கடலின் அக்கரையில் உள்ள சத்திய ஓலக்கத்திற்குச் சென்று,

உலேவில்லாத ஒரு பொருளோடு ஒன்றி, தனி உயிராகத் தத்தளிக்கும் என்னை உலேத்து விடவே துடிக்கிறேன்' என்கிருர் தாகுர்:

அலேகள் எறியும் விளேயாட்டில்
அழிந்த காலம் அழிந்ததுகாண்.
உலேவில் பொருளில் எனே ஒடுக்கி
உலேவது ஒன்றே விழைகின்றேன்.
நிலேயும் நீச்சும் காணுத
நீண்ட பள்ளத்து அயலெங்கோ
நிலவி விளங்கும் ஓலக்கம்
நேர்வது ஒன்றே நேர்கின்றேன்.

இப்படிப் பாடிய போதிலும், இந்த உலகத்தைத் துறந்து செல்லும் நிவிருத்தி மார்க்கத்தைக் குருதேவர் ஏற்கவில்லே. இங்கேயுள்ள வாழ்க்கை மூலமாக அலகிலா ஒன்றைத் தொடலாம் என்பதே அவருடைய கருத்து. இது காரணமாக, அவரைக் கருத்தளவில் ஒரு வைஷ்ணவர் என்று வங்காள இலக்கிய அறிஞர்கள் பேசுகிருர்கள். இதனுல் விஷ்ணுவைப் பரம் பொருளாக அவர் வழிபட்டார் என்பது பொருளன்று. உண்மையில் நிர்க்குணப் பிரும்மமாகவே குருதேவருடைய சிந்தையில் நித்தியப் பொருள் தோன்றியது. ஆனுல் மனிதனுடைய உயிருக்கும், கடந்து நிற்கின்ற கடவுள்-தத்துவத்துக்கும் உள்ள தொடர்பை, எத்தனேயோவிதமான மனித உறவுகளின் மூலமாக அவருடைய கவிதை விளக்குகிறது. கடவுளேத் தாயாகவும், தந்தையாகவும், அரசனுகவும், காதலனுகவும் பாவித்து, நம்முடைய ஆழ்வார்கள், நாயன்மார்களேப் போல, நூற்றுக்

கணக்கான பாடல்களே அவர் பாடியிருக்கிறுர். இப்பாடல் களில், மனித உறவுகளின் உணர்ச்சி வேகம் துடிப்பதைக் காணலாம். அதே சமயத்தில், இந்த உணர்ச்சியைச் சரடாகக் கொண்டு, இறைவனே நோக்கிச் செல்லும் உயிரின் மெய்ப் பொருள் யாத்திரைப் படிகள் பலவற்றையும் காணலாம். சிறு வைர மணிக்குள்ளே, அலகிலாத ஒளி துள்ள வில்லேயா, அது போல, இப்பாடல்களில், அகண்டாகாரமான சத்தியத்தின் பேரொளி சுடர் விடுகிறது. இதோ பாருங்கள் ஒரு பாட்டு, நாயகி-நாயக பாவத்தில் அமைந்தது:

பாட்டில் தலைவி பேசுகிறுள். இரவில் நாயகனேத் தேடிச் செல்கிறுள் தனிமையாக; பகலிலே அவன் வருவான் என்று பதறும் உள்ளத்தோடு காத்திருக்கிறுள்; மறுபடியும் இரவு வருகிறது. இவள் தேடிப் போகவில்லே. அவனே வந்து விடு கிறுன்; வசமிழந்து மருவ நினேக்கிறுள்; ஆனுல், அவள் மார்பில் உள்ள ஆபரணம் ஒளி சிந்தவே, அந்த வெளிச்சத்தில் நாயகனே அணேய நாணுகிறுள்.

தன்னே மறந்து, தன் நாமம் கெட்டால் அல்லவா தலே வனேக் கூட முடியும்?

இருளில் தனியே அவனேக்காண
        ஏகும் அந்த நள்ளிரவில்,
குருவி ஒன்றும் கூவுவதில்லே,
        குறுமென் காற்றும் அசைவதில்லே.
தெருவில் எங்கும் மோனம்; ஆனுல்
        சில்லென்று அறைஎன் சிலம்பொலியே
பெருகும் பாதம் பெயரப் பெயரப்
        பிய்க்கும், ஐயோ, வெட்கமடி!

வருவான் என்றே மாடத்தேறி
வழியை அளக்கும் வேளையிலே
மரமீது இலைகள் அசையாது அயரும்;
மயங்கிக் காவல் மறந்து, துயில்
புரியும் பேதை வாள்போல், ஆற்றுப்
புனலும் கிடக்கும்; பாழ் நெஞ்சோ,
திரியும், பதறும், சிதறும், அதனைத்
தேற்ற வழியோ இல்லையடி.

அருகில் வந்தே அமர்வான்; என்தன்
ஆவி சிலிர்க்கும்; இமை செருகும்;
திரையாய் மேகம் வானை மறைக்கும்;
செல்லக் காற்று விளக்கணைக்கும்.
மருவ நினைந்தால் மானங்குலைத்து என்
மார்பின் இழையே ஒளிசிந்தும்.
உருவி அதனை எங்கோ வீசி
ஒளிக்க வழியும் இல்லையடி!

இப்படியெல்லாம் பல விதமான மனித உறவுகளை ஆதாரமாக வைத்தே கடவுளைப் பற்றிப்பாடிய போதிலும், இறைவனை வடிவம் கடந்த பூரணமாகவே குருதேவர் கருதுகிறார். என்றாலும், வடிவற்ற ஒன்றை, நம்மைச் சுற்றியுள்ள கோடி கோடி வடிவங்களின் மூலமாக உணரலாம் என்பதை அவருடைய கவிதை பேசுகிறது. இந்தப் பிரபஞ்சம், மண்ணும், விண்ணும் அண்ட கோளங்களும், உயிர் என்ற மாயமும், உயிரற்றவை என்று நாம் கருதும் விந்தைகளும் ஒன்றாக அலைமோதும் இந்த வடிவப் பெருங்கடல், இதுவே இறைவனுடைய

விராட்ஸ்வரூபம், இதுவே அவனுடைய திருமேனி என்பது வைஷ்ணவ சித்தாந்தம். இந்த அடிப்படையில், தாகுரின் கவிதை இயங்குகிறது. இதனுலேயே அவரை வைஷ்ணவர் என்று பேசுகிருர்கள். இதனுலேயே தாகுருடைய கவிதைக்குத் தனித் தன்மை ஒன்று ஏற்படுகிறது.

மனித வாழ்க்கையின் எத்தனையோ நிலைகளைப் பற்றியும் தாகுர் பேசுகிருர். குழந்தைப் பருவமா, இதோ அவருடைய கவிதையில் சின்னஞ் சிறுவன் ஒருவன் சோம்பல் முறிக்கிருன்:

படிச்சது போதும், அம்மா—நானும்
படிச்சது போதும் அம்மா!
விடிஞ்ச முதற் கொண்டே—கண்ணை
விழித்துப் படித்தாச்சு.

இந்த அலுப்பில், 'பகல் பன்னிரண்டு மணிக்கே, இரவு ஏன் வரவில்லை' என்ற தீராத பிரச்னையில் ஆழ்கிருன். 'வந்தால் தூங்கலாமே!' என்று எண்ணி பட்டப் பகலிலேயே இரவு வந்து விட்டதாகக் கற்பனை செய்கிருன்:

புன்னை மரத்தடியில்—நீண்டு
போகு திருளும் அம்மா;
மின்னி மின்னிக் குளமும்—கறுத்து
மேகமாய் விட்டதம்மா.
பன்னிரண்டு மணிதான்—இரவில்
பாதி என்ருல், பகலில்
பன்னிரண்டு மணிக்கே—இரவும்
பாய்ந்தேன் வருவதில்லை?

இன்னொரு சிறுவன் ‘நான் ஒரு சண்பகப் பூவாய் இருந்தால்’ என்று கற்பனை செய்து பார்க்கிறன்:

சண்பகப் பூவாய் நானிருந்தால்—இந்தத்
தண் மரத் துச்சியில் நான் வளர்ந்தால்
நண்ணிடுங் காற்றில் நகைத்திடுவேன், பசும்
நாண்தளிர் மீது நடித்திடுவேன்.

இன்னொருவன், சந்திரனை இங்கிருந்தே எட்டிப் பிடிக்க முடியும் என்று சாதிக்கிறன்:

‘வட்ட மதி ஓர் கடம்பக் கிளைக்குள்ளே
வந்து சிறைப்படும் மாலையிலே,
எட்டி அதனை யாரும் பிடிக்கலாம்,
ஏன் முடியாது, சொல்’ என்று சொன்னேன்.

இவற்றையெல்லாம் கனிவோடு பார்த்துச் சிரித்துக் கொண்டே, காட்சி வரம்பு என்ற கட்டைத் தெறித்து, கட்டில்லாத கனவாற் சமைந்த குழந்தை உலகத்திற்கே கவிஞர் தாகுர் போய் விடுகிறர்.

என்தன் குழந்தை இதயத்தில்
இலகும் உலகம் சென்றே நான்
பந்தம் இல்லா அமைதியினிற்
படிய நினைப்பேன்; அவ்வுலகில்,
விந்தைத் தாரகை வாய்பேசும்;
விரைந்து வானம் இறங்கி வரும்;
முந்தும் மழைதன் வில் வளைத்து
முற்றத் திறங்கி விளையாடும்.

தாயின் பரிவோடு குழந்தையைப் பார்க்கிறார். 'வெண்ணெய் அளைந்த குணுங்கும், விளையாடும் புழுதியும்' படிந்து கண்ணன் வருவதைக் கண்டு களிக்கும் நமது பெரியாழ்வாரைப் போல, கவிஞர் தாகுரும், முகத்தில் அப்பிய மையோடும், கிழிந்த ஆடையோடும் ஓடிவரும் குழந்தையைக் கண்டு சொக்கிப் போகிறார்; குழந்தையைக் குற்றம் சொல்பவர்களைப் பார்த்து, 'ஐயோ, இப்படியும் பாவிகள் உண்டா?' என்று பேசி, 'வா, அம்மா, வா, அவர்கள் ஏதாவது பேசி விட்டுப் போகட்டும். என்னிடம் வா' என்று குழந்தையை அணைத்துக் கொள்கிறார்:

கண்ணே, நீ கண் கலங்கி நிற்பதேன்? உன்மனமும்
புண்ணாக ஏதேதோ பொல்லாங்கு சொல்லுகிறார்.
எப்போதும் உன்குற்றம் ஏதேனும் காண்கின்றார்.
அப்பா, கொடியவர்கள், ஆங்காரப் பாவியர்கள்.
உன்தன் விரலில், முகத்தில், சிறிதே மை
சிந்தி விட்டால் என்னவாம்? சிச்சீ, அழுக்கென்பார்.
கொட்டி மையைத் தன் முகத்தில் வட்டநிலா வந்த தென்றால்
திட்டி அழுக்கென்று அதனைச் சீறத் துணிவாரோ?

குழந்தை என்ற அற்புதம் எப்படிப் பிறந்தது என்று அதிசயித்துத் தாய்மையின் நிறைவிலே கிளுகிளுக்கிறார்:

அனைத்துலகின் செல்வமே, ஆருயிரே, எப்படியோ
எனக்குரிமை ஆனாய், இதுவென்ன விந்தையடி!

குழந்தை உலகத்தைப் பற்றி எப்படியோ, அப்படியே காதலின் பல்வேறு நிலைகளையும், தாகுர் தமது கவிதை வலை

வீசிப் பிடிக்கிறார். ஒரு பாடலில், காதலியின் புடவைத்தலைப்பு, காற்றில் அசைந்து, காதலன் மேலே பட்டு, அவனைக் கள்வெறி கொள்ளச் செய்கிறது. மற்றொரு பாட்டில், 'நீ சொல்வதைப் பார்த்தால் என்னுடைய அழகு, அழியாத அகண்ட மாயமாக அல்லவா தோன்றுகிறது? நீ சொல்வதெல்லாம் உண்மை தானா?' என்று தலைவி ஒருத்தி ஏக்கத்தோடு தன் தலைவனைக் கேட்கிறாள். இன்னொரு பாட்டில், 'இந்த அன்பு தாங்க முடிய வில்லை. என்னை விடுவித்துவிடு. விடுவித்தால், மறுபடியும் உனக்கு அடிமையாவேன்' என்று தடுமாறும் காதலன் ஒருவன் நாக்குழறப் பேசுகிறான். வேறொரு பாட்டில் 'அரசன் வந்தான்; தெருவிலே பவனி போனான். அவனைப் பார்த்தேன். ஆனால் அவன் என்னைத் திரும்பியும் பார்க்கவில்லை. அதனால் என்ன? அவன்முன் நான் வீசி எறிந்த என் நகையை, அவனுடைய தேர்க்கால் நொறுக்கிப் போயிற்று. அதனால் என்ன, அவனைப் பார்த்தேன். அதுவே போதும்' என்று உருகுகிறாள் ஏழைப் பெண் ஒருத்தி. 'நேரம் கழிகிறது. அலங்காரம் செய்து கொள் வதிலேயே பொழுதைப் போக்கி விடாதே. உள்ளபடியே வா. ஒப்பனை எதற்கு? உன்னையல்லவா காதலிக்கிறேன்?' என்று காதலியை அழைக்கிறான் காதலன். இப்படி எத்தனை எத் தனையோ!

உலக அரங்கிலே நடைபெறும் வேறு பல நிகழ்ச்சிகளைப் பற்றியும் குருதேவரின் கவிதை பேசுகிறது. மிகுந்த நாட்டுப் பற்றுடையவர். அவருடைய கவிதை மட்டுமன்று, அவருடைய வாழ்க்கையே அதற்குச் சான்று. நம்முடைய பாரதியாரைப் போலவே, தாகுரும், தமது தேசபக்தியின் அடித்தலமாக, தமது தாய்மொழிப் பற்றையும், அம்மொழி பேசும் மக்கள் சமுதாயத் தில் தமக்குள்ள ஈடுபாட்டையும் அமைத்துக் கொள்ளுகிறார்.

அதற்குக் கவிதை வடிவம் தருகிறுர். 'ஸோனுர் பங்காள' (தங்க வங்கம்) என்ற அழகிய பாடல் வங்காளத் தாய்க்கு அவர் கூறிய அற்புத வாழ்த்து. ஆனுல் வங்காளத்தோடு நில்லாமல், அவருடைய அன்பு, பாரத தேசம் முழுவதையும் அணைக்கிறது. நமது பாரதியார் 'வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர்' என்று தொடங்கி 'வாழிய பாரத மணித் திருநாடு' என்று முடிக்கவில்லையா? அதே போல பாரதப் பழம் பெரும் நாடு முழுவதையும், தாகுர் தமதாகக் கருதுகிறுர்; விந்தியத்தையும், இமயத்தையும், 'எங்கள் மலைகள்' என்று பெருமிதம் அடைகிறுர்; பாஞ்சாலம், சிந்து, கூர்ஜரம், மராட்டியர் நாடு, தமிழகம், அனைத்தையும் தமது வங்காள நாட்டோடு நாடாகவே கருதி, இந்திய மக்கள் அனைவரையும் எம்மொழியினராயினும், எச்சமயத்தவராயினும், எந்நிலையினராயினும் ஒரே இனமாகப் போற்றி

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

என்று பாடுகிறுர். பாரத நாட்டுக்கப்பாலும் அவருடைய விரிந்த உள்ளம் செல்கிறது; ஆப்பிரிக்க மக்களுடைய துயரிலே பங்கு கொள்கிறது; ஐரோப்பியரின் உழைப்பையும், விஞ்ஞானத் திறமையையும் பாராட்டி, அதே சமயத்தில், அவர்களுடைய லோகாயதத்தை ஒதுக்கித் தள்ளுகிறது; மனிதன் எங்கிருந்தாலும் அவனை உடன்பிறப்பாக எண்ணி, அவன் பெருமையைப் பரவுகிறது; அவன் குறைக்கு இரங்குகிறது, அவன் கொடுமையைக் கண்டிக்கிறது. மனித உலகம் முழுவதும் அவருடைய கவிதையின் பொருளாக அமைகின்றது.

குழந்தை, காதலன், காதலி, உழைப்பாளி, கிழவன்,

அன்பு, வெறுப்பு, பெருமை, பொறுமை, நட்பு, பகைமை, ஆசை, நிராசை, தாபம், அமைதி, எதைப் பற்றித்தான் அவர் பேசவில்லை? ஆனால் எதைப் பற்றி அவர் பேசிய போதிலும், இங்கே நடைபெறும் மனித வாழ்க்கையை மிக நுணுக்கமாக, உள்ளபடியே அவர் காட்டிய போதிலும், அவர் பேசும் பொருளில் எல்லாம், காட்டும் காட்சியில் எல்லாம், பொருளுக்கும் காட்சிக்கும் அப்பாற்பட்ட சத்தியம் ஒன்றின் சாயல் எப்போதும் படிகிறது. உழவன் நண்பகல் வெய்யிலில் கழனி வெளியில் உடம்பை ஒடித்து உழைக்கிறான்; நாணம் படர்ந்த விழிகளோடு காதலி தன் நாயகனைக் காணச் செல்கிறாள்; ஆற்றிலே தோணிக்காரன் படகு செலுத்துகிறான்; கரையில் குழந்தைகள் மணலை வாரி இறைத்து விளையாடுகிறார்கள்; உலோபி ஒருவன் எங்கேயோ பணத்தைப் புதைத்து வைக்கிறான்; முனிவனோ அதை ஆற்றிலே வீசி எறிகிறான்; அரசியற் சுழலில் பலர் ஆடுகிறார்கள்; உடலின்பம் இல்லையே என்று கிழவன் ஏங்குகிறான்; உயிரின்பம் எது என்று ஞானி தேடுகிறான்; இப்படியாக, மனித வாழ்க்கையின் ஆயிரம் ஆயிரம் நிலைகளைக் கவிஞர் தாகுர் பாடுகிறார். பாடும்போது, வாழ்க்கையிற் பிடிப்போடு, அதன் வண்ணம் சிறிதும் மங்காமல் பாடுகிறார்; ஆனால், மனித வாழ்க்கையில் எதைப்பற்றிப் பேசிய போதிலும், அது தனித்து நிற்கவில்லை, வாழ்க்கையின் மற்றைய பகுதிகளோடு, இறைவன் என்ற சக்தியால் பிணைக்கப் பட்டிருக்கிறது என்ற உண்மை அவருடைய பேச்சில் தொனித்துக் கொண்டே இருக்கிறது. இதுவே தாகுர் கவிதையின் தனித்தன்மை.

இயற்கைக் காட்சிகளைப் பற்றி அவர் பாடும் போதும் இப்படித்தான். வாழ்க்கையின் அரங்காக நிற்கும் இயற்

கையை—அதாவது, இந்த வானையும், மண்ணையும், அவற்றிலே உள்ள கோடி கோடிப் பொருள்களையும், உயிர்களையும், பருவ கால மாற்றங்களையும், நோக்கி, நோக்கி, அவற்றின் அழகிலே, நளினத்திலே, கொடுமையிலே, பயங்கரத்திலே, தனித்தன்மையிலே தம்மை மறந்து பாடுகிறார். அவருடைய பாடல்களில், பொன்னொளி சிந்தி, காலை வருகிறது; தாமரை விரிகிறது; பறவையின் கானம், வைகறை மோனக் கடலில் அலையெனச் சிலம்புகிறது; அருவியின் கரையில் மலர்கள் பூத்து எழில் நடம் பயில்கின்றன; நண்பகல் வெம்மையிலே, தேனீ முனகுகிறது; இரத்த வெள்ளத்திலே மாலை மாய்கிறது; பறவைகள் கூடு நோக்கி ஆடிச் செல்கின்றன; மழை பொழிகிறது; வறண்ட மண் தழைக்கிறது; 'கொழுங்கொடி முல்லையின் கொழுமலர் அணவி' மாருதம் அலைகிறது; தாரகை சுடர் விடுகிறது; காலையை எதிர்நோக்கி, இரவு மோனத்தவம் புரிகிறது. காற்றும், மழையும், கடலும் ஊழித்தாண்டவம் ஆடுகின்றன.

ஆனால் ஒன்று, இயற்கைக் காட்சிகளைப் பற்றி பாடும் போது, அவற்றின் வெளித்தோற்றத்தை மட்டும் வருணிப்பதோடு நில்லாமல், அவற்றை ஊடுருவி நிற்கும் ஆழ்ந்த பொருளையும் அவர் சுட்டிக் காட்டுகிறார். புயலின் பயங்கரத்தில், ஏதோ ஒரு சில பூத சக்திகளின் பேயாட்டத்தை மட்டுமன்று, ஊழியில் உருவாகும் மஹா ஸம்ஹாரத்தின் குரலையே அவர் கேட்கிறார். இளவேனிலின் இனிய மழலையில், உலகையெல்லாம் தாய்போல் அணைக்கும் பேரருளின் கனிவை அவர் காண்கிறார். அந்தி மாலையின் செக்கர் வெள்ளம், அவருடைய பார்வையில், அலகில்லா ஆற்றலின் ஒரு செவ்வலையாகப் புரள்கிறது. மலரின் புன்னகையில் இறைவனுடைய விழி

தென்படுகிறது. கடல் அலையின் விம்மலில், அகண்டப் பேரெழிலின் சதங்கையொலி கொஞ்சுகிறது. குருவியின் சிறகொன்று விழுந்தால், நட்சத்திர மண்டலம் சலிக்கிறது. சிறுமணல் ஒன்றில், விசுவ வெளி முழுவதையும், ஒரு கணத்தினுள்ளே காலாதீத நெடும் பரப்பையும், நேரடியாகவோ, அடிநாதமாகவோ காட்டிச் செல்கிறது குருதேவரின் கவிதை.

இதனால், நுட்பமாக, சொல்லாமற் சொல்லி, மனத்தின் சாயல்களையும், தத்துவக் கருத்துக்களையும் உணர்த்துவது தாகுருடைய கவிதையின் இயல்பு ஆகிறது. கருத்துக்களும், மனச்சலனங்களும், தத்துவங்களும் பெரும்பாலும் தொனிப் பொருளாகவே அவருடைய கவிதையில் இடம்பெறும். அவருடைய பாடல்களில், சொற்களின் நேரடியான பொருளுக்குப் பின்புறத்தில் அரு-உருவாகத் தோன்றியும், தோன்றாமலும், உணர்ச்சி-சிந்தனை ஒளி, மெல்லிய இழையாக ஓடும். இதனால் அவருடைய கவிதைக்குத் தனி அழகும், வசீகரமும் கிட்டுகின்றன. என்றாலும், சில சமயங்களில், எதைக் குறிப்பிடுகிறார் என்று தெரியாமல் மயங்கவும் நேரிடுகிறது. பாடலைப் படிக்கும் போது, எவ்வளவு எளிமை, எவ்வளவு அழகு என்று சொல்லுவோம். உள்ளே நிழலாடும் கருத்தைப் பிடிப்பதற்குக் கைநீட்டினால், தண்ணீரில் தோன்றும் சந்திரபிம்பத்தைத் தொடமுயலும் குழந்தையின் கதையாக முடியும். தொட்ட உடனே, தண்ணீர் கலந்து, பிம்பமும் சிதறி மறைவது போல், சொற்களை ஆராயத் தலைப்பட்டவுடனே, சொல்லும் கலங்கும், அது வரையில் அதில் ஒளிர்ந்த கருத்தும் உருக்கரந்து விடும்.

‘கனி திரட்டல்’ என்ற கவிதைத் தொகுதியிலிருந்து ஒரு பாடல் இதற்கு எடுத்துக்காட்டு. இதோ உள்ளது அந்தப் பாடல்:

‘மறைகிறேன்’ என்றது வான்முகில் என்னிடம்.
‘வைகறைச் செந்தீயில்
பாய்கிறேன்’ என்றது இரவு.
‘அவனுடைய அடிச்சுவடாய்
மோனத்தில் அழுந்துவேன்’ என்றது துன்பம்.
‘பூரணத்தில் கரைவேன்’
என்றது என் உயிர்.
‘உன் எண்ணங்களை, கணந்தோறும்
என் ஒளி முத்தமிடுகிறது’ என்றது பூமி.
‘நாட்கள் கழிகின்றன. ஆயினும்
உனக்காகக் காத்திருப்பேன்’
என்றது அன்பு.
உன் வாழ்க்கைப் படகை,
கடல் தாண்டிச் செலுத்துவேன்’
என்றது சாவு.

பொருள் விளங்குகிறதா? மொழிபெயர்ப்பிலே குறை ஒன்றும் இல்லை. பொருள் விளங்காமல் இருப்பதற்கு, மொழி பெயர்ப்பைக் காரணமாகச் சொல்லவேண்டாம். பாட்டின் இயல்பே அப்படி இருக்கிறது. ‘பொருள் என்ன?’ என்று கேட்டால், ‘இப்படிக் கேட்கும் அளவுக்கு, பாடல் உன்னைக் கவர்ந்ததல்லவா, அதுதான் அதன் பொருள். தாமரை மலரின் பொருள் என்ன? ‘இதன் பொருள்’ என்று தொடங்கி ‘என்றவாறு’ என்று முடிக்கப் பார்க்கிறாய், இல்லையா? மகனே, அந்தத் திட்டவட்ட முடுக்குத்தான் கவிதையைக் குழிதோண்டிப் புதைக்கும் இடம். அந்த இடுகாட்டில், கருத்து வெள்ளெலும்பு

களைப் பொறுக்கலாம், கவிதையைக் காணமுடியாது' என்று கவிஞர் சிரித்து விட்டுப் போவாரோ என்னவோ!

இந்த வாழ்வை, தாகுர் ஒதுக்கவில்லை; ஒதுக்க முயலவும் இல்லை. அதற்கு மாருக, இந்த உலக வாழ்வில் அவர் திளைத்தார்; அதுவே சத்தியத்தைக் காணும் வழி என்று கண்டார், காட்டினுர். அலைக்கும் கடலுக்கும் எப்படி முரண்பாடில்லையோ, அப்படியே வாழ்க்கைக்கும் (அது ஓர் அலை) இறைவனுக்கும் (அவன் ஒரு கடல்) முரண்பாடில்லை என்ற தரிசனம் அவருடைய கவிதையில் வடிவாகிறது.

குருதேவர் சொல்கிருர், நூறு வருடங்கள் கழிந்தபின், அவருடைய கவிதைகளைப் புரட்டிப் பார்க்கும் ஒருவனைப் பார்த்து, அதாவது என்னைப் பார்த்து, உங்களைப் பார்த்து, சொல்கிருர்: 'நண்பா, யாரோ நீ? நூறு ஆண்டுகளுக்குப் பிறகு என்னுடைய பாடலைப் படிக்கிருய். படி, படி. ஆனுல் இதோ, என் முன்னே பூத்துக் குலுங்கும் வசந்த மலரில் ஒன்றையாவது என்னுல் உனக்கு அனுப்ப முடியுமா? இதோ, இந்த வண்ண மேகத்துணுக்கில் சிக்கிப்புரளும் பொன்னில் ஒரு துளியாவது எடுத்து உனக்குப் பரிசாக வழங்க முடியுமா? முடியாது, முடியாது.

என் பாடலைப் படிக்க வேண்டுமா? முதலில் ஒன்று செய். உன் வீட்டுக் கதவைத் திறந்து, உன் நெஞ்சின் கதவையும் திறந்து, வெளியே பார். எதிரிலே உள்ள பூங்காவில் அங்கே கமழும் நறுமணத்தில், இன்று என்முன் நடனமாடும் எழிலையெல்லாம் கண்டுகொள். உன் நெஞ்சில் ஊறும் களிப்பில், என்னைப் பித்தாய்ச் செய்யும் இந்த உயிரோட்டத்தை உணர்ந்துகொள். அப்போது என் பாடல் உனக்கு விளங்கும். காலத்தைக் கடந்து என் உயிரும் உன் உயிரும் ஒட்டும். என் செத்த சொல்லும் சாகா உயிராகும்.'

நூறு வருடம் கழிந்தபின் என்
நூலைப் புரட்டிக் கவிதையினை
ஆறப் பருக எண்ணுகிறாய்,
யாரோ நீயும்? அன்பா, கேள்.
தேறி இந்த இளவேனிற்
செல்வ மலரில் ஒன்றேனும்,
மீறும் வண்ண மேகத்தில்
மின்னும் பொன்னில் துளியேனும்

என்னால் உனக்குப் பரிசாக
எடுத்து வழங்க இயன்றிடுமோ?
அன்பா, நீயே உன் கதவை
அகலத் திறந்து வெளியே பார்.
முன்னி என்றோ எனதுளத்தில்
முகிழ்த்த வாச நினைவையெலாம்
உன்முன் மலரும் பூங்காவில்
உணர்ந்துன் வாழ்வில் களித்திடு நீ.

ஒரு நூற்றாண்டின் முன்னர் என்றோ
உதித்த வசந்தத்து ஒரு நாளில்
பெருகிக் களிப்பாய் என்னுளத்தைப்
பித்தாய்ச் செய்த உயிரோட்டம்
வரையில் லாமல் வடித்த இசை,
வளரும் காலம் கடந்து உன்னை
மருவும் வியப்பை, உன் மனத்தில்
மலரும் களிப்பில் உணர்ந்திடு நீ.

‘வாழ்வை உணர்ந்து, அதனுள் தோய்ந்து களித்தால், என் பாடலும், என் உள்ளமும் உனக்குப் புரியும்’ என்கிருர் குருதேவர். உண்மைதான். ஆனுல், அவருடைய பாட்டில், அதன் மூலமாக அவருடைய உள்ளத்தில், தோயும் போதுதான் வாழ்வின் பெருமையும், அழகும் நம்முடைய மனத்தில் ஊறு கின்றன என்பதும் உண்மை. இயற்கையின் அளக்கொணு அழகு, மனித வாழ்வின் அலகிலாத் தன்மை, இரண்டிலும் மாயமாய் உறையும் சத்தியத்தின் ஒளி, இவற்றைப் பேசும் ஞானியின் குரலே குருதேவரின் கவிதைக்குரல்.

# இம்மொழிபெயர்ப்பு

மொழிபெயர்ப்பு என்பதே கடினமான சோதனை. அதுவும், கவிதையை மொழிபெயர்ப்பது காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடைக்கின்ற கணக்குத்தான். என்ருலும், உலகப் புகழ்பெற்ற கவியரசர் இரவீந்திரநாத தாகுருடைய பாடல்களில் பல ஆண்டுகளாக எனக்குள்ள ஈடுபாடும், அப்பாடல்களைத் தமிழில் வடிவாக்கித் தரவேண்டும் என்று நெடுநாளாக எனக்கிருந்த ஆசையும், இம்முயற்சியில் என்னை இறங்கச் செய்தன. ஆனல், நேரமே கிடைக்கவில்லை. நாலைந்து ஆண்டுகளாக, ஏதோ கிடைத்த நேரத்தையெல்லாம் இதற்கெனச் செலவிட்டு, இந் நூலை உருவாக்கினேன். இப்போது, மிகுந்த அச்சத்தோடும், கவலையோடும், இம்மொழிபெயர்ப்பை உங்கள் முன் வைக்கிறேன்.

மொழிபெயர்ப்பு எப்படிச் செய்யப் பெற்றது என்பதைப் பற்றி ஓரிரு வார்த்தை இங்கே கூறுவது என்னுடைய கடமை யாகிறது. பாடல்களின் ஆங்கில வடிவத்தை அடைவாகக் கொண்டு தொடங்கினேன். வங்காளி மொழியில் மலர்ந்த பாடல்களாயிற்றே, அவற்றின் ஆங்கில உருவத்தை அடிப் படையாக வைத்து, தமிழில் மொழிபெயர்ப்பது பொருந்துமா என்று கேட்கலாம். வங்காளியில் முதலில் இயற்றிய தமது பாடல்களில் பலவற்றைத் தாகுரே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தந்திருக்கிருர். தாகுரே செய்துள்ள இந்த மொழி பெயர்ப்பை மூலமாகக் கொண்டு, அப்பாடல்களைத் தமிழிலே தருவதில் தவறில்லை. என்ருலும், வங்காளி மூலத்தையும் பார்த்தால் பயனுடையதாய் இருக்குமே என்று நினைத்தேன். நல்ல

வேளையாக, எதிர்ப்பாராத விதத்தில் எனக்கு உதவி கிடைத்தது. தூத்துக்குடி மத்திய அரசாங்க மீன்வளத்துறையில் பணி யாற்றுவதற்கு, டாக்டர் இரவீந்திரநாத பட்டாச்சார்யா என்ற அறிஞர் ஒருவர் வந்து சேர்ந்தார். உயிரியலில் டாக்டர் பட்டம் பெற்ற இந்த விஞ்ஞான அறிஞர், அதே சமயத்தில் ஸம்ஸ் கிருதத்திலும், வங்காளியிலும் விற்பன்னராகவும் விளங்குகிருர். வங்காளி மொழியில் பல கட்டுரைகளும், சில நாவல்களும் எழுதியுள்ள இவருக்கு, தாகுருடைய கவிதையில் எல்லையற்ற ஈடுபாடு உண்டு. இவருடைய நட்பு எனக்குக் கிட்டியது. ஆங்கி லத்திலிருந்து நான் மொழிபெயர்த்த பாடல்கள் பலவற்றின் வங்காளி மூலத்தை, இவருடைய உதவியைக் கொண்டு நேரில் அறியும் வாய்ப்புப் பெற்றேன். வங்காளிப் பாடல்களைப் பதம் பிரித்து, பொருள் சொல்லி, பிறகு பாடியும் காட்டுவார். இதனுல் பல தெரிந்து கொண்டேன்:

(1) வங்காளி மூலத்தில் உள்ள கருத்துக்கள் அனைத்தை யும், தெளிந்த, கவிதை நயம் வாய்ந்த ஆங்கிலத்தில் தாகுரின் மொழிபெயர்ப்பு, பெரும்பாலும் தருகிறது.

(2) மொழிபெயர்க்கும் போது, வங்காளி மூலத்தைச் சில இடங்களில் தாகுரே சுருக்கி இருக்கிருர்; சிற் சில பகுதிகளை விட்டிருக்கிருர். இதனுல் மொழி பெயர்ப்பின் தரம் அப்படி ஒன்றும் குறைந்துவிட வில்லை. அதற்கு மாருக, பல இடங்களில், மூலத்தை விடச் செறிவிலும், தொனி ஆற்றலிலும், மொழி பெயர்ப்பு உயர்ந்துள்ளது. ஆனுல், வங்காளிகள் இக்கருத்தை ஏற்பார்களோ, என்னவோ!

(3) வங்காளி மூலத்தில் உள்ள சப்த விசித்திரங்கள் அற்புதமானவை. அப்பாடல்களில், விதவிதமாக

நடனமாடி வரும் மோனையும், எதுகையும், சந்தமும் என்னென்னவோ மாயங்களை இழைக்கின்றன. இவற்றை அப்படியே வேறு எந்த மொழியிலும் தர இயலாது*; தாகுரே செய்த ஆங்கில மொழி பெயர்ப்புக் கூட, இவற்றைத் தரவில்லை, தரமுயல வும் இல்லை. ஆனால், மூலத்தின் ஓசை நயங்களில் தோய்வதனால், அது எந்த உணர்ச்சியின் அடிப் படையில் எழுந்தது, சொல்லும், சொல்லின் நேர்ப் பொருளும் கடந்த எந்த உள்ளக் கிடக்கை தொனி யாக அதனுள்ளே அரும்புகிறது, என்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது. தெரிந்து கொண் டால், கவிஞனுடைய சொல்லை மாத்திரமன்று, நெஞ்சையே நமது மொழிபெயர்ப்பில் எதிரொலிப் பதற்கு முன்னினும் அதிக வசதி கிட்டுகிறது.

ஆங்கில மூலத்திலிருந்து, பாட்டின் பொதுப் படையான பொருள்; வங்காளி மூலத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பதன் மூலம், அப்பொருளுக்குத் தெளிவு; பாடலில் ஒவ்வொரு சொல்லையும் கூர்ந்து நோக்கித் திரட்டிய தொனி; சொல்லுக்கும் சொல்லுக் கும் இடையிலே உள்ள மோனத்தைத் துழவிப் பெற்ற கமகங் கள்; பாட்டின் சந்தத்திலும், ஒலி நயத்திலும் ஆழ்ந்து, ஆழ்ந்து கண்ட உணர்ச்சிச் சூழல்; இவை அனைத்தையும், ஒன்றாய், பிரிக்கமுடியாத ஒரே உயிர்த்தத்துவமாய், தமிழிலே, தமிழி லேயே இயற்கையாக அரும்பிய ஒன்றாகத் தருவதே என் னுடைய இலட்சியமாக அமைந்தது.

* இது வங்காளி மொழியின் தனிப் பெருமையன்று. எந்த மொழியில் உள்ள பாடலையும், அப்படியே, அதன் ஓசை நயம் குன்றாமல் வேறு மொழியில் தருவது பொதுவாக சாத்திய மில்லை.

இதை ஓரளவாவது நிறைவேற்றுவதற்கு, செய்யுள் வடிவம் இன்றிஅமையாதது எனக் கண்டேன். இவ்வாறு எண்ணுவதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று, தமிழ் மரபிலே, கவிதையும் யாப்பும், உயிரும் உடலும் போல இயங்கி வந்துள்ளன என்பது; அதாவது, வெறும் உரை நடை, எவ்வளவுதான் கவிதைப் பண்பு உடையதாக அமைந்தாலும், தமிழனுடைய காதில், செய்யுளைப் போல அவ்வளவுக்குக் கவிதையாக ஒலிப்பதில்லை என்பது. மற்றொன்று, தாகுருடைய பாடல்கள் பெரும்பாலும் செய்யுள் நடையிலே அமைந்து அதன் எழிலைப் பெற்றவை. இந்த எழிலைக் கூடுமான வரையில், தமிழில் தருவதற்கு, தமிழிலும் செய்யுளைக் கருவியாகக் கொள்ளுவதே பொருந்தும் என்ற முடிவுக்கு வந்தேன். சில இடங்களில், இசைத்தமிழ் வகைகளையும் கையாளலாம் என்று கருதினேன்.

இதனால், தாகுருடைய வங்காளிப் பாடல்களின் செய்யுள் அமைப்பை அப்படியே தமிழில் மேற்கொண்டிருக்கிறேன் என்பது பொருளன்று. அவ்வாறு செய்வது சாத்தியமில்லை. செய்ய முயன்றால், தமிழ் மரபுக்குப் பொருந்தாமற் போகலாம்; அதோடு, பாட்டின் பொருளையும், தொனியையும் அந்த அளவுக்கு இழக்கவும் நேரிடலாம். ஆகவே தாகுர் கையாண்ட செய்யுள் வடிவத்தை அப்படியே தமிழில் பிரதி செய்வதற்குப் பதிலாக, அவருடைய பாட்டின் பொருளையும் தொனியையும், தமிழ்ச் சொற்களில் எப்படித் தேக்கலாம் என்று எண்ணி, பிறகு அச்சொற்களை எந்தச் செய்யுள் வடிவத்தில் அமைத்தால், மூலத்தின் சந்தமும் யாப்பமைதியும் தருகின்ற உணர்ச்சியைத் தமிழிலே எட்டக் கூடும் என்று ஒருவாறு முடிவு செய்து, மொழிபெயர்ப்பை உருவாக்கினேன். ஆனால் ஒன்று:

தாகுருடைய பாடல்களிற் பல இசைப் பாடல்கள். இசையிலே அவர் விற்பன்னராக விளங்கினர். 'இரவீந்திர சங்கீதம்' என்ற புதிய இசை உலகு ஒன்றையே அவர் படைத்ததாகச் சொல்லுகிறார்கள். ஆனால் அவருடைய இசைப்பாடல்களில் உள்ள இசையை முக்கியமாகக் கொண்டு, அதற்கேற்பத் தமிழ்ச் சொற்களைக் கோத்தால், இசையை வேண்டுமானால் அப்படியே பெறலாம்; ஆனால், இசையை ஒதுக்கி, அத்தமிழ்ச் சொற்களை மாத்திரம் படிக்கும்போது, அவை உரை நடையுமன்றி, செய்யுளுமன்றி, வெறும் ஒலிப் பிண்டங்களாக, மூலத்தின் பொருளையும், கவிதையையும் இழந்த புழுதியாகத் தோன்றும். இந்த எண்ணத்தின் காரணமாக, மூலத்தின் இசைக்கேற்பத் தமிழை அமைக்கும் வெறுமை முயற்சியை மேற்கொள்ளவில்லை. தமிழ்ச் செய்யுள் வடிவத்தைக் கொண்டே, மூலத்தின் இசையால் கிடைக்கும் உணர்ச்சியை உருவாக்க முனைந்தேன்.

படிப்பதற்கு எளிமையாக இருக்கவேண்டும் என்பதற்காக, கூடுமான வரையில், பாடல்களில் உள்ள சொற்கள் சந்தி பிரித்து அச்சிடப் பெற்றுள்ளன. இதனால், பாட்டின் சந்தமும், சீர்களின் அமைப்பும் சிறிது கலைந்து தோன்றலாம். அதனால் என்ன? சந்திகளை அங்கங்கே வருவித்து, பாட்டின் ஓசையை உருவாக்கிக் கொள்ளுவது அவ்வளவு கடினமானதன்று. ஓரளவுக்குச் செய்யுட் போக்கு அறிந்தவர்கள் இதனை எளிதாகச் செய்து கொள்ளலாம்.

மொழி பெயர்ப்பின் நடையை எவ்வளவுக்குக் கூடுமோ அவ்வளவுக்கு எளிமையாக அமைக்க முயன்றிருக்கிறேன். சொற்றொடர்களும், வாக்கியங்களும் பேச்சு வழக்கின் சாயலைப் பெற்றால் உணர்ச்சியை வெளியிடுவதற்கு வாய்ப்பு அதிக

மாகும் என்று கருதி, பெரும்பாலும் அவ்வழக்கையே பின்பற்றி இருக்கிறேன்.

சுருங்கச் சொன்னால், தமிழிலேயே எழுந்த பாடலாக, கவிதையாக, மொழிபெயர்ப்பை வடிவாக்க வேண்டும், தாகுரின் கவிதையில் உள்ள கருத்து, தொனி, உணர்ச்சி இவற்றைச் சிதைவு ஏதுமின்றித் தரவும் வேண்டும்; இதுவே நோக்கம். இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதில் ஏற்பட்ட இடர்ப்பாடுகளையும், அவற்றைச் சமாளிக்கக் கையாண்டமுறைகளையும் பற்றி, இங்கே நான் பேச விரும்பவில்லை. நோக்கம் எந்த அளவுக்கு நிறைவேறி உள்ளது என்பதைக் கணிப்பதற்கும் எனக்கு உரிமை இல்லை. அது உங்களுடைய உரிமை. இம் மொழிபெயர்ப்பு, சிறிதளவாவது, மகாகவி தாகுருடைய, உள்ளத்திற்கு உங்களை அழைத்துச் சென்றால், அதுபோதும், அது ஒன்றே போதும்.

அ. சீ. ரா.

# நன்றி

இந்தச் சிறு முயற்சியையும் பெரிதாகப் பாராட்டி முன்னுரை நல்கிய பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களுக்கும்,

வங்காளியில் உள்ள மூலப் பாடல்களைப் பலமுறை பாடிக் காட்டி, பொருளை விளக்கி, எனக்கு உதவிய டாக்டர் இரவீந்திரநாத பட்டாச்சார்யா அவர்களுக்கும்,

மொழிபெயர்ப்பை அவ்வப்போது ஆராய்ந்து, அதன் தரத்தை உயர்த்தக் கட்டளைக் கல்லாக இருந்து வந்த எங்கள் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் கு. நா. சிவராமகிருஷ்ணன், ஆங்கில ஆசிரியர் தி. வைத்தமாநிதி, நண்பர் திரு. பி. எஸ். சுப்பராமன் ஆகியோருக்கும்,

மொழி பெயர்ப்பைப் பிரதி செய்வதில் பெரும்பங்கு கொண்ட என் மாணவர்கள் திரு. சு. இராமசுவாமிக்கும், திரு. தி. வைத்தமாநிதிக்கும்,

அச்சுப் பிழை திருத்திப் பேருதவி புரிந்த எங்கள் கல்லூரித் தமிழ் ஆசிரியர்கள் திரு. பு. இராசதுரை, திரு. அ. ரெ. பொன்னையா ஆகிய இருவருக்கும்,

பாடல்களின் உரிமையை வழங்கி மொழி பெயர்க்க அனுமதித்த விசுவபாரதி, மாக்மில்லன் கம்பெனி ஆகிய இரு நிலையங்களுக்கும் என் நன்றி.

அ. சீ. ரா.

## பொருளடக்கம்

# 1

'நான் எப்படி அம்மா, பிறந்தேன், எங்கே இருந்து வந்தேன்?' குழந்தைகள் சாதாரணமாகக் கேட்கும் கேள்வி இது. தாய் என்ன பதில் சொல்வாள்?

இச்சையைப் பற்றியோ, அது பொங்கித் தணிந்த இன்ப வானத்தைப் பற்றியோ பேச இயலுமா? பேசினல் குழந்தைக்கு விளங்குமா? உண்மைதான் ஆகுமா? 'உன்னைக் கடைத்தெருவில் அப்பா விலைக்கு வாங்கி வந்தார்' என்று சிரித்துக் கொண்டே நொண்டிச் சமாதானம் கூறும் தாயைக் கண்டிருக்கிறோம். ஆனால் அந்தச் சிரிப்பிற்குள்ளேதான் எத்தனை நினைவுகள், எத்தனை உணர்ச்சிகள்! கன்னிப் பருவம், அதன் கனவுகள், காதல், உடலின் போதை, உலகெங்கும் ஓடுகின்ற உயிர் வெள்ளம் குழந்தையாக வடிவெடுத்த விந்தை, — இத்தனையும் கலந்த புல்லரிப்பு, தாயின் நெஞ்சில் ஓடாதா? இதை இங்கே சொல்ல முயல்கிறார் கவிஞர்.

## பிறந்த கதை

தங்க மதலை தாயைப் பார்த்து 'அம்மா, நான்
எங்கிருந்து வந்தேன் எனை எங்கே கண்டெடுத்தாய்?
சொல் அம்மா' என்ன, எடுத்தணைத்துத் தாய்
சொல்வாள்:

'செல்வமே, நீ எனது சிந்தை நடுவில்
ஒளித்திருந்தாய் ஆசை ஒளிக்கனவாய்; என்றோ
களித்து நான் ஆடிய கன்னி விளையாட்டுப்

பாவைகளில் நீ இருந்தாய். பச்சைக் களிமண்ணை
நீவி என்தன் நெஞ்சில் நிறைந்த கடவுளரை
வண்ணச்சிலையாய் வடித்தேன். அழித்தழித்துப்
பண்ணும் வடிவிலெலாம், பாவையே, நீ இருந்தாய்.
எந்தம் குல தெய்வத் துள்ளிருந்தாய்; நாள் தோறும்
உன்தனையே தெய்வத்தோடு ஒன்ருய் வழிபட்டேன்.
தாயாக எண்ணித் தழைத்த உளத்தினிலே
மேய பெருங்காதலிலே மேவி இருந்தாய் நீ.
வீட்டில் விளக்கேற்றி வைக்கும் குலதெய்வம்,
நாட்டுக் கொரு தெய்வம், நந்தா அருள் தெய்வம்,
தெய்வத்து அருள்மடியில், தெய்வதமே, எங்கள் குலம்
உய்ய வளர்ந்தாய் ஒருகோடி நாளெல்லாம்.
சின்னஞ் சிறுவயதில், செல்வமே, என்னிதயப்
பொன் பூ அவிழப் புதுமணமாய் நீ வந்தாய்.

காலை இளம்பரிதி கண்விழிக்கு முன்னே, வான்
நீலத் திரையில் நிமிர்கின்ற வெள்ளியென
என்னிளமை மேனி எழிற் சாயலாய் உன்தன்
மென்மை மலர்ந்ததடி. மின்னிவரும் காலையொளி
தன்னேடு இரட்டை மகவாக நீ வந்தாய்.
முன்னுகின்ற வானின் முதல் மகவாய் நீ பிறந்தாய்.
வையத்து வாழ்வில் மிதந்து மிதந்து வந்து
பையவே என்னிதயப் பாரில் ஒதுங்கி விட்டாய்.
உன் முகத்தை நோக்குவேன், உற்றதனை
நோக்கினுல்,
என்னை வசமாக்கி மயக்குமோர் மாமாயம்.

அனைத்துலகின் செல்வமே, ஆருயிரே, எப்படியோ
எனக்குரிமை ஆனாய்; இதுவென்ன விந்தையடி?
உன்னை இழந்து விடுவேனோ என்றஞ்சி
என் மார்பிற் புல்லி இறுக அணைத்திடுவேன்.
அந்தமிலா வையத்தின் செல்வமாய் நின்ற உன்னை
என்தன் சிறுகையில் ஈர்த்தது எந்த மந்திரமோ?

## 2

குழந்தைக்குப் பொம்மை வாங்கித் தருகிறோம். அப்போது தெரிகிறது, வண்ண வண்ணப் பொம்மை வரிசையாக, இந்த உலகை ஏன் இறைவன் நமக்குப் படைத்து வைத்தான் என்று.

நாம் பாடுகிறோம். பாட்டுக்கு இசைய, குழந்தை ஆடுகிறது. அப்போது தெரிகிறது, இந்த உலகம் முழுதும், பலவிதமான இசைகளை, ஏன் இறைவன் அமைத்து வைத்தான் என்று.

குழந்தைக்குத் தின்பண்டம் ஊட்டுகிறோம். மலரிலே தேனையும், கனியிலே மதுரத்தையும் ஏன் இறைவன் வைத்தான் என்பது அப்போது தெரிகிறது.

குழந்தையை முத்தமிடுகிறோம். அப்போது தெரிகிறது, ஒளியாகவும், தென்றலாகவும் வந்து, ஏன் இறைவன் நம்மைத் தொடுகிறான் என்று.

### அப்போது

வண்ணப் பொம்மை உனக்கின்று
வழங்கும்போதே உணர்கின்றேன்.
கண்ணே, புனலும் அணிமுகிலும்
காணும் வண்ண விளையாட்டும்,
சுண்ணம் நிறைந்த மலரிதழில்
சுடரும் நிறமும் ஏனென்றே
வண்ணப் பொம்மை கொணர்ந்துனக்கு
வைக்கும் போதே உணர்கின்றேன்.

ஆட நீயும், நான்பாடி
அமையும் போதே அறிகின்றேன்.

ஆடும் இலைகள் இசை பாடும்
அருமைப் பாடும், அலைகளெலாம்
கூடி மண்ணின் உளங்குளிரக்
கொட்டும் பண்ணும் ஏனென்றே
ஆட நீயும் நான் பாடி
அமையும் போதே அறிகின்றேன்.

உண்ண உனக்குத் தின்பண்டம்
ஊட்டும் போதே உணர்கின்றேன்.
கிண்ண மலரில் நிறை மதுவும்,
கிளரும் கனியில் மறைவாக
உள்நிரம்பும் சாறும், இதோ
ஊறும் திறத்தைத் தின்பண்டம்
உண்ண உண்ணக் கை நீட்டும்
உனக்குத் தரும்போது உணர்கின்றேன்.

முத்தமிடவும் மலரும் உன்தன்
மூரல் ஒளியில் தெளிகின்றேன்.
நித்தம் காலை ஒளியினிலே
நிறைவு வெள்ளம் பெருகுவதும்,
மெத்தென் தென்றல் மேவ, உடல்
மேவு சுகமும், ஏனென்றே
முத்தமிட்டே உன் முகத்து
மூரல் ஒளியில் தெளிகின்றேன்.

# 3

ஆசையும், ஐயப்பாடும், பூசலும் பொருமையும் நிறைந்த உலகம் என்ற சந்தை இருள் நடுவிலே, குழந்தை வருகிறது, தெய்வ விளக்காக, அன்பின் ஒளியாக. நம்முடைய நெஞ்சிலும் அன்பு பிறக்கிறது. மெல்ல, மெல்ல, வாழ்க்கையையே வழிபாடாகச் செய்து கொள்ளப் பழகுகிரேம். இறைவனுடைய அலகிலா மோனத்தில், நம்முடைய குறைவெல்லாம் சங்கமம் ஆகி நிறைவுபெறத் திரும்புகிறது.

## குழந்தைத் தெய்வம்

ஓயாத பூசல், ஒழியாத சச்சரவு,
வீயாத ஐயம், விளியாத பேரவலம்
சந்திக்கும் பேயிரைச்சல் சந்தை இருள் நடுவே,
நந்தா விளக்காய், நடுங்காத பொற்சுடராய்,
வந்துநிற்பாய் செல்வமே, வாடுமவர் உன்ருலே
முந்தும் களிப்பால் மோனத்தவம் பெறுக!

ஆசையிலே வீழ்வார், அழுக்காற்றில் வெம்பிடுவார்,
நாசக்குரூரம் நயந்திடுவார்; செங்குருதி
தோயத் துடிக்கும் கூர்வாளைப் போல், சொல்லையெலாம்
வாயில் மடக்கி வைப்பார், வஞ்சம் பல புரிவார்
ஆருத் தழல் உளத்தில் அன்புருவே, போய் நின்று
மாருத தண்மை மலர் விழியால் பாலித்து,
வெந்த பகற்பொழுதின் வெஞ்சமரை மன்னிக்கும்
அந்தி அருள் போல, அமைதி பொழிந்துவிடு.

உன் முகத்தைப் பார்த்து இவ்வுலகப் பொருள வற்றின்
தன்மை உணர் ஞானத் தகுதி இவர் பெறுக!
அன்பினுல் உன்னே அணைத்துப் பழகியதால்
அன்பால் தமரை அளிக்கும் திறன் உறுக!
செல்வக் குழந்தாய், நீ சேர்ந்திங்கே எங்கள்முன்
எல்லேயிலா ஒன்றின் இதயமாய் வீற்றிருந்து,
காலேயிலே பூப்போல் கருத்தின் இதழ்விரித்து,
மாலே வரும் போது மகிழ்ந்து தலேவணங்கி,
ஆன பகல் முழுதும் ஆன்ற வழிபாட்டை
மோனத்தில் மூழ்கி முழுமைப் பரமாக்கு.

## 4

“யாராவது கூலி கொடுத்து என்னை வாங்குவார்களா?' என்று கூவிக்கொண்டே போனேன். அரசன் வந்தான். 'கூலியா? நீ என் அடிமை. அடிமைக்குக் கூலி கொடுப்பது ஏது?' என்று பேசினான். என்னை ஆட்கொள்ள இயலாமல் திரும்பினான். பணத்தினால் என்னைப் பெற்று விடலாம் என்று வந்தான் ஒரு கிழவன்; அழகினால் என்னை அடக்கிவிடலாம் என்று வந்தாள் ஒரு குமரி; இருவரும் ஏமாந்து திரும்பினர். 'என்னிடம் கொடுப்பதற்கு ஒன்றும் இல்லை, என்னோடு விளையாட வா, எனக்குப் பணியாளாக இரு' என்று அழைத்தது ஒரு குழந்தை. விளையாட்டாக ஏற்றுக் கொண்டேன். குழந்தைக்கு அடிமையானேன். அந்த அடிமைத்திறத்திலே விடுதலை கண்டேன்.'

### கூலி

காலையிலே நான் கற்கள் பரப்பிய
சாலை வழியே நடந்து சென்றேன்.
'கூலி கொடுத்தென்னைக் கொள்பவருண்டோ?
கொள்ள வாரீர்' என்றே கூவி நின்றேன்.

வாரினில் வாளொடு மன்னவன் வந்தான்,
வண்ணப் பொன்தேரினில் ஏறி வந்தான்.
'யாரடா, என்தன் ஆணையே கூலி, என்
அடிமை யடாநீ' என்றுரைத்தான்.

ஆளும் அரசின் வெறுமையினால் என்னை
ஆட் கொள்ளச் சற்றும் இயலாமல்,

வாளினை ஏந்தி, பொன்தேரிலே வந்தவன்
வந்த வழியே திரும்பிவிட்டான்.

வேகாத வெய்யிலில் வீடுகள் மூடி
வெறித்துக் கிடந்தன; எங்கேயும்
போக விடாமலே கோணிய சந்தில்
புகுந்து நடந்தேன் நண்பகலில்.

கையினில் காசு நிரம்பிய பையைக்
கட்டி வந்தான் ஒரு மொட்டைக்கிழம்;
பைய வந்தான், பதம் பார்த்து வந்தான், 'இதோ
பை நிறையப் பணம், கூலி' என்றான்.

காசை எடுத்தான், கையில் நிறுத்தான், பின்
கண்முன் ஒவ்வொன்றாய்ச் சுண்டி விட்டான்;
கூசி முகத்தைத் திருப்பிக் கொண்டேன், விலை
கொள்ள வந்த கிழம் எள்ளி வந்தேன்.

மாலையிலே பசும் வேலி எங்கும் மலர்
மண்டிக் குலுங்கும் அவ்வேளையிலே,
'கூலிக்கிங்கே எனைக் கொள்வாருண்டோ?' எனக்
கூவி நடந்த பொழுதினிலே,

வாலைக்குமரி ஒருத்தி வந்தாள், ஒளி
வண்ண விழி என் மேல் வீசி நின்றாள்;
'கூலியா வேண்டும்? என் கொள்ளை முறுவலே
கூலி அதற்கிணை கூறிடெ'ன்றாள்.

மின்னும் நகை எழில் வற்றியது, வற்றி
மீறும் கண்ணீராய் உருகியது;
என்னை விலை கொள்ள வந்த வடிவும்
எங்கோ இருளில் திரும்பியது.

வெண் மணல் மேல் வெய்யில் மின்னியது, கடல்
விந்தை அலை சிந்தி ஓடியது;
வெண் மணல் மேலொரு சின்னக் குழந்தை
வெற்றுக் கிளிஞ்சில் வைத்தாடியது.

சின்ன முகத்தை உயர்த்தியது, முன்
தெரிந்தவன் போல் எனை நோக்கியது;
'ஒன்றுமில்லை கையில், என்தன் பணிசெய்ய
ஓடிவா' என்றெனை ஊக்கியது.

வேடிக்கையாகவே ஏற்றுக் கொண்டேன், ஒரு
வெள்ளைக் குழந்தை விளையாட்டில்
தேடி எனைக் கட்டக் கட்டுத் தெறித்தது;
தெய்வ விடுதலை தேறி நின்றேன்.

## 5

குழந்தையின் உலகம், இயற்கை விதிகளையெல்லாம் மீறு கின்ற அற்புதப் பெருவெளி. அங்கே, வானம் இறங்கிவரும், நட்சத்திரம் வாய் திறந்து பேசும்; ஊமையாக நிற்கும் பொருள் கள் யாவும் கதை சொல்லும். அந்த உலகத்தின் ஊடே செல்லும் நெடுஞ்சாலை வழியே, வரலாறில்லாத நாட்டின் அரசில்லா அரசரின் தூதர், வேலை எதுவுமின்றி விரைந்து கொண்டே இருப்பார்கள். அங்கே, தான் இயற்றிய சட்ட திட்டங்களைப் பகுத்தறிவு பட்டம் விடும்; காட்சி என்ற வரம்பு தெறிக்கும்; கனவின் அலகிலா மாயம் நிறையும்.

### குழந்தை உலகம்

என்தன் குழந்தை இதயத்தில்
இலகும் உலகம் சென்றே நான்
பந்தம் இல்லா அமைதியினிற்
படிய நினைப்பேன்; அவ்வுலகில்
விந்தைத் தாரகை வாய்பேசும்;
விரைந்து வானம் இறங்கி வரும்;
முந்து மழை தன் வில் வளைத்து
முற்றத் திறங்கி விளையாடும்.

எந்த விதத்தும் அசையாமல்
ஏழை ஊமைக் கோலத்தில்
குந்திக் கிடக்கும் பொருளெல்லாம்
கூடி நகர்ந்து, சன்னல் முன்

வந்து திரளும்; வகை வகையாய்
வன்னக் கதைகள் சொல்லும்; ஒளி
சிந்தும் பொம்மைக் கொள்ளையை என்
சின்னக் குழந்தை முன்வைக்கும்.

என்தன் குழந்தை மனத்தினிலே
ஏகும் சாலை வழியே, நான்
சென்று, வரம்பே இல்லாத
திடரைச் சேர முடிந்திடுமோ?
எந்தப் பெருமை வரலாறும்
இல்லா அரசின் தூதரங்கே
வந்து போவார் தலைதெறிக்க,
வகையாய் வேலை எதுவுமின்றி.

திட்டவட்டமாய்த் திருத்தித்
திருத்தித் தானே செய்கின்ற
சட்டம் அவற்றைப் பகுத்தறிவு
தானே சாடும்; வண்ண வண்ணப்
பட்டமாகப் பறக்கவிடும்;
பார்க்கும் காட்சி வரம்பென்னும்
கட்டைத் தெறிக்கும், கட்டில்லாக்
கனவாற் சமைந்த அவ்வுலகில்.

# 6

குழந்தையின் தூக்கம், முறுவல், சோபை, இவை எங்கிருந்து வருகின்றன?

சின்னக் குழந்தையின் கண்களிலே ஒளி
சொக்கத் துடிக்கும் துயில் மயக்கம்
எந்த இடத்தில் பிறந்ததுவோ, இங்கே
எப்படி வந்ததோ யாரறிவார்?

மின்மினி கூட்டும் கனற்பொறி காட்டிருள்
மேனி துழாவிடும் மங்கலிலே
கந்தர்வர் ஊர்ப்புறக் காவினில் மந்திரக்
கற்பக மாய அரும்பிரண்டாம்.

விஞ்சை அரும்பிவை தம்மில் மலர்ந்திங்கு
மேவிக் குழந்தை விழியினிலே
கொஞ்சித் துயிலும் குலாவியதாம்; ஊரில்
கூறும் பராபரிச் செய்தி இது.

சின்னக் குழந்தை துயின்றிடும் போது அதன்
செவ்விதழ்மேல் தளிர் மென்முறுவல்
எந்த இடத்திற் பிறந்ததுவோ, இங்கே
எப்படி வந்ததோ யாரறிவார்?

விண்பிறை தன்னில் சிலிர்த்தெழுந்த பிஞ்சு
வெள்ளிநிலாக் கதிர் துள்ளி வந்தே
கண்ணிற் படாமற் கரைந்திட ஓடிடும்
கார்முகில் ஓரத்தைத் தொட்டவுடன்,

மென்பனி மூழ்கி வெளுத்த பொன் வைகறை
வேய்ந்த கனுவிற் பிறந்ததுவாம்,
சின்னக் குழந்தை துயின்றிடும் போது அதன்
செவ்விதழ்மேல் மின்னும் மென்முறுவல்.

சின்னக் குழந்தையின் மேனியிலே ஒளிர்
செந்தளிர்ச் சோபையின் பொன்மெருகும்
எந்த இடத்திற் பிறந்ததுவோ, இங்கே
எப்படி வந்ததோ யாரறிவார்?

கன்னிப் பெண்ணுய் அதன் தாய் இருந்தாள்; அந்தக்
காலத்திலே அவள் நெஞ்சினிலே,
இன்னதென எண்ண ஒண்ணுத மோனத்தில்
இன்பத்தின் மாமாயம் மூண்டதுவாம்.

இன்பம் அதனிற் பிறந்ததுவாம், இங்கே
ஏகி எழில்ஒளி ஆகியதாம்,
சின்னக் குழந்தையின் மேனியிலே முத்தம்
சிந்திடும் சோபையின் பொன்மெருகு.

## 7

'குழந்தை அழுக்காய் இருந்தால் என்ன? நிலா அழுக்குடைய முகத்தோடு வரவில்லையா?

குழந்தை ஏதோ விளையாட்டில் சொக்காயைக் கிழித்துக் கொண்டு விட்டது. அதனால் என்ன? கிழிந்த மேகத்திற்குள்ளிருந்து காலைப்பொழுது சிரிக்க வில்லையா?

பிழைகள்தாம் இவர்கள் கண்ணிலே படுமா? தித்திப்புத் தின்பண்டம் வேண்டும் என்று குழந்தை கேட்டால், அது தவறு? அதைப் போய்ப் பெருந்தீனிக்காரன் என்று பேசுவது? எனக்குந்தான் இந்தக் குழந்தை இனிக்கிறது, தெவிட்டாமல் இனிக்கிறது. இதைப் பார்த்து இந்த ஆங்காரப் பாவிகள் எனக்கு என்னென்ன பெயர் வைத்துத் திட்டுவார்களோ?' என்று தாய் பேசுகிறாள்.

### பொல்லாங்கு

கண்ணே, நீ கண் கலங்கி நிற்பதேன்? உன் மனமும்
புண்ணாக ஏதேதோ பொல்லாங்கு சொல்லுகிறார்.
எப்போதும் உன்குற்றம் ஏதேனும் காண்கின்றார்.
அப்பா, கொடியவர்கள், ஆங்காரப் பாவியர்கள்.
உன்தன் விரலில், முகத்தில், சிறிதே மை
சிந்திவிட்டால் என்னவாம்? சீச்சீ, அழுக்கென்பார்.
கொட்டி மையைத் தன்முகத்தில் வட்டநிலா வந்த
தென்றால்
திட்டி அழுக் கென்றதனைச் சீறத் துணிவாரோ?
குற்றங்கள் எத்தனையோ கூறுவார். ஒன்றுமிலா
அற்பத்திற் கெல்லாம் அதட்டுவார். சின்னக்

குழந்தை நீ ஆடும் விளையாட்டில், ஏதோ
கிழிந்ததுன் ஆடையென்றால், ஓகோ குடிமுழுகிப்
போச்சென்பார், சுத்தமில்லாப் பீடையென்று
தூற்றிடுவார்.

சீச்சீ, இவர்க்கிந்தச் சீற்றமும் ஆகாது.
மேலே கிழிந்து தொங்கும் மேகத்திற் குள்ளிருந்து
காலைசிரித்தால் களங்கமதிற் காண்பாரோ ?

எண்ணி எண்ணி உன்பிழைகள் எல்லாம் கணக்
கெடுப்பார்.

கண்ணே, அவர் சொல்லைக் காதிலே வாங்காதே.
தித்திப்பில் ஆசை நீ வைத்தால், அதற்காக
மெத்தப் பெருந்தீனிக் காரன் என்று கத்துவதோ ?
சித்தம் மயங்கி இவர் சீறுகிறார். விட்டுவிடு.
தித்திப்பில் துள்ளுவது தீமை, பேராசை யென்றால்,
தித்திக்கும் உன்மேல் தெவிட்டாத ஆசை வைத்த
பித்தி எனக் கென்னென்ன பேர் வைத்து
அழைப்பாரோ ?

8

மேகமும், அலேயும் தன்னே அழைப்பதாக, தாயைப் பார்த்துக் குழந்தை பேசுகிறது.

## மேகமும் அலேயும்

அம்மா, மேகத்தில் வசிக்கும் மக்கள்
என்னே வா என்று அழைக்கிருர்கள்.
ஆமாம், அம்மா.
'வாடா, வா, இங்கே பொழுதெல்லாம் விளேயாட்டு.
எழுந்ததிலிருந்து இரவு வரையில்,
ஒரே விளேயாட்டு.
தங்க உதயமும், வெள்ளிச் சந்திரனும்
எங்கள் விளேயாட்டுப் பொம்மைகள்.
வருகிருயா, நீயும் வருகிருயா?'
என்று கேட்கிருர்கள்.
நான் கேட்கிறேன்: 'எப்படி வருவது?'
'அதற்கென்ன, மண்ணின் விளிம்பிற்கு வா.
வானத்தை நோக்கிக் கையை நீட்டு.
மேக மண்டலத்திற்கு வந்து விடலாம்'
என்கிருர்கள்.
'வீட்டில் எனக்காக அம்மா காத்திருப்பாளே,
எப்படி விட்டு வருவேன்?' என்ருல்,
புன்சிரிப்புச் சிரித்துப் போய்விடுகிருர்கள்.
ஆனுல், அம்மா, அதனுல் என்ன?
அவர்கள் விளேயாட்டை விட அருமையான ஒன்று

எனக்குத் தெரியும். என்னவா? சொல்கிறேன்:
'நான் தான் மேகம்; நீதான் சந்திரன்.
உன்னை என் கைகளால் கட்டி மறைப்பேன்.
நமது வீட்டு மோடுதான் வானம்.
எப்படி?'

அலையிலே வாழும் மக்கள்
என்னை அழைக்கிறார்கள், அம்மா.
'காலையிலிருந்து மாலை வரையில்
பாடுகிறோம், ஆடுகிறோம்.
ஓரிடத்தில் நில்லாமல், ஓரிடத்தில் ஒதுங்காமல்,
போகிறோம் பயணம், போகிறோம், போகிறோம்.
நீயும் வருகிறாயா?' என்று அழைக்கிறார்கள்.
'எப்படி வருவது?' என்றால்
'கரையின் விளிம்பிற்கு வா;
கண்ணை இறுக மூடிக் கொள்;
அலைகளின் மேலே ஆட வந்து விடலாம்'
என்கிறார்கள்.
'பொழுதடைந்தால் வீட்டிற்குப் போக வேண்டும்;
அம்மா தேடுவாள்.
அவளை எப்படி விட்டு வருவேன்?' என்றால்
புன்சிரிப்புச் சிரித்து
ஆடி ஆடிப் போய் விடுகிறார்கள்.
அதனால் என்ன, அம்மா?
நான் தான் அலை, நீதான் கரை.
நான் புரளுவேன், புரளுவேன், புரளுவேன்.

சிரித்துப் புரண்டு உன் மடியிலே விழுவேன்.
ஒருவருக்கும் தெரியாது.
அப்போது நீயும் நானும்
எங்கே இருக்கிறோம் என்பது
உலகத்திலே ஒருவருக்கும் தெரியாது.
தெரிய வேண்டாமே!

'சந்திரனைக் கையால் எட்டிப் பிடிக்கலாம். முடியாதா? ஏன் முடியாது?' என்று கேட்கிறான் சிறுவன்.

அண்ணன் சொல்கிறான்: 'அட போடா, அதெப்படி முடியும்?'

அண்ணனுடைய காரணங்கள், குழந்தையின் கற்பனை உள்ளத்திற்கு விநோதமாகத் தென்படுகின்றன.

சந்திரன்

'வட்டமதி ஓர் கடம்பக் கிளைக்குள்ளே
வந்து சிறைப்படும் மாலையிலே
எட்டி அதனை யாரும் பிடிக்கலாம்.
ஏன் முடியாது, சொல்' என்று சொன்னேன்.

அண்ணன் சிரித்தான்: 'உன்தனைப் போலோர்
அசட்டுக் குழந்தையைக் கண்டதில்லை.
எண்ணத் தொலையாத தூரத்துச் சந்திரன்
எப்படிக் கையில் அகப்படுவான்?'

என்று சிரித்தான், 'என்ன அசடு நீ!
எங்கள் விளையாட்டை மாடியிலே
நின்று, சிரித்து, அம்மா பார்த்திருந்தால் அவள்
நீண்ட தொலைவில் இருப்பவளோ?'

என்றுரைத்தேன் அண்ணன் ஏனோ சிரித்தான்;
'ஏது மறியாத மட்டி' என்றான்.
'பென்னம் பெரிய நிலாவைப் பிடிக்கப்
பெத்த வலைக் கெங்கே போவ'தென்றான்.

‘இங்கிருந்தே கையால் எட்டிப் பிடிப்பேன்’
என்று சொன்னேன்; அண்ணன் நம்பாமல்
‘எங்கும் உன்னைப் போல் ஏமாளியை நான்
என்றுமே பார்த்ததும் இல்லை’ என்றான்.

‘வட்ட நிலாவை உன் வாண்டுக் கையாலெட்டி
வாகாய்ப் பிடிக்கவும் கூடுமோடா?
கிட்டத்தில் வந்தால் தெரியுமடா, அது
கொள்ளைப் பெரிசெ’ன்று கூறி நின்றான்.

‘பள்ளிக்கூடத்தில் படித்ததெல்லாம் இந்தப்
பைத்தியந்தானா? கிட்ட வந்தே
அள்ளி அணைக்கையில் அம்மா முகமும்
ஆயிரம் பங்கு பெரிசாமோ?’

என்று சொன்னால் என்தன் அண்ணன் சிரிக்கிறான்;
ஏனென் றெனக்குத் தெரியவில்லை.
‘உன்னைப் போலே ஓர் அசட்டுக் குழந்தை
உலகில் இல்லை’ என்று உளறுகிறான்.

## 10

பகல் பன்னிரண்டு மணி. சிறுவனுக்குத் தூக்கம் வருகிறது. தாயோ 'படி' என்கிருள். கண்ணை மூடிக்கொள்கிருன் சிறுவன். உடனே அவனைப் பொறுத்தமட்டில், மாலைப் பொழுது வந்துவிடுகிறது. ஏன் தூங்கக்கூடாது? பன்னிரண்டு மணிதானே இரவிற் பாதி? அப்படியாளுல் பாதி இரவு, இந்தப் பன்னிரண்டு மணிக்கே வரவேண்டாமா? ஏன் வரவில்லை? இதுவே சிறுவனை மயங்க வைக்கும் புதிர்.

### பன்னிரண்டு மணி

படிச்சது போதும், அம்மா—நானும்
படிச்சது போதும், அம்மா.
விடிஞ்ச முதற் கொண்டே—கண்ணை
விழித்துப் படித்தாச்சு.

பன்னிரண்டு மணிதான்—ஆச்சு
படி படி படி என்பாய்.
பன்னிரண்டு மணிக்கே—இந்தப்
பகலும் உறங்காதோ?

பாரேன் வயற் பரப்பில்—இதோ
படுத்திடும் சூரியனை.
ஏரிக்கரை மேட்டில்—மெள்ள
ஏறி அந்தக் கிழவி,

தொண்டு கிழம், கீரை—இரவு
சோற்றுக்குத் தேடுகிருள்;
கண்ணிலே கண்டதம்மா—இதுவும்
கற்பனே இல்லே அம்மா.

கண்ணே நான் மூடிக் கொண்டால்—இந்தக்
காட்சி தெரியுதம்மா;
பண்ணேக் கள வெளியில்—நிழலும்
பதுங்கி வருகுதம்மா.

புன்னே மரத்தடியில்—நீண்டு
போகு திருளும் அம்மா;
மின்னி மின்னிக் குளமும்—கறுத்து
மேகமாய் விட்டதம்மா.

பன்னிரண்டு மணிதான்—இரவில்
பாதி என்ருல், பகலில்
பன்னிரண்டு மணிக்கே—இரவும்
பாய்ந்தேன் வருவதில்லே?

## 11

'நான் மட்டும் ஒரு சண்பகப் பூவாய் இருந்தால், என்ன வெல்லாம் செய்வேன் தெரியுமா ?' என்று குழந்தை கற்பனே செய்கிறது. அதைத் தாயிடம் சொல்கிறது.

### சண்பக மலர்

சண்பகப் பூவாய் நான் இருந்தால், இந்தத்
தண் மரத் துச்சியில் நான் வளர்ந்தால்,
நண்ணிடுங் காற்றில் நகைத்திடுவேன், பசும்
நாண் தளிர் மீது நடித்திடுவேன்.

என்னே இனங்கண்டு கொள்ளாமல், அம்மா நீ
'எங்கேயடா போனுய்' என்றழைப்பாய்.
என்தனுக்குள்ளே சிரித்திருப்பேன், சத்தம்
ஏதும் காட்டாமல் ஒளித்திருப்பேன்.

கள்ளத்தனமாய் இதழ் விரிப்பேன், என்னேக்
காட்டாமலே உன்னேக் கண்டிருப்பேன்;
கொள்ளே வேலே செய்து சுற்றும் உன்னேக் கண்
கொட்டாமலே நின்று பார்த்திருப்பேன்.

காலேயில் ஆற்றில் குளித்தவுடன், ஈரம்
காயாத கூந்தல் உன் தோளில் விழ,
சாலேத் திருப்பத்தைத் தாண்டி இங்கே இந்தச்
சண்பக நீழல்தனில் வருவாய்.

வந்துன் வழக்கம்போல் முற்றத்திலே, பச்சை
வண்ணத் துளசி மடம் தொழுவாய்;
எந்த மணமோ என நினைப்பாய், எழும்
என் மணம் கண்டு மகிழ்ந்திருப்பாய்.

நண்பகல் வேளையில் பாரதத்தை நீ
நாடிப் படித்திடும் போதினிலே,
சண்பக நிழல் உன் கூந்தலில் தங்கிப்பின்
தங்க முகத்தினில் நீள விழும்.

பென்னம் பெரிய உன் புத்தகத்தை நீ
பிரித்துப் படிக்கும் இடத்தினில் என்
சின்ன நிழல் வந்து குந்தும்; அஃதை உன்தன்
செல்வ மகளென் றுணர்வாயோ?

கையில் விளக்கொடு மாலையில் நீ, பசு
கட்டும் தொழு செல்லும் போதினிலே,
பையத் தரையிற் குதித்து முன்போல் உன்தன்
பச்சைக் குழந்தையாய் மாறிடுவேன்.

'நல்ல கதை ஒன்று சொல்' எனவே உன்னை
நச்சரிப்பேன். 'எங்கே போயிருந்தாய்?
சொல்லடா, பொல்லாத சுட்டி' என்பாய்; நானே
'சொல்ல மாட்டேன், போ' எனச் சிரிப்பேன்.

## 12

'அப்பா ஏதேதோ எழுதுகிருர். அவர் எழுதுவது ஒன்றும் எனக்குப் புரியவில்லே. அவர் என்ன எழுதினுலும், எத்தனே காகிதத்தைக் கறுப்பாக்கிப் போட்டாலும் பேசாமல் இருக்கிருய். அவருடைய காகிதத்தை எடுத்து நான் எழுதினுல் மட்டும் ஏன், அம்மா, என்னேத் திட்டுகிருய்?' என்று குழந்தை கேட்கிறது.

### எழுத்தாளன்

எத்தனேயோ புத்தகம் அப்பா எழுதுகிருர்.
புத்தகம் ஒன்றும் எனக்குப் புரியவில்லே.
அம்மா, பொழுது இருளாய்ப் போகும்வரை உனக்குச்
சும்மா அவர் படிக்கும் சொல்லும் புரிகிறதா?

என்னென்னவோ கதைகள் என்தனுக்குச்
சொல்வாயே,
உன்னேப் போல் அப்பாவும் ஏன் எழுதக்கூடாது?

அப்பாவுக்கு அம்மா ஒருத்தி உண்டோ?
உண்டானுல்,
தப்பாமல் நல்ல கதை சொல்லி இருப்பாளே?
பொல்லாத பூதம், இளவரசி, கந்தருவர்,
எல்லாக் கதைகளேயும் அப்பா மறந்தாரா?

குளிக்க மறந்து அப்பா குந்தி இருப்பார்; நீயோ
பளிச்சென்று நூறுதரம் போய்ப்போய் அழைத்
திடுவாய்.
சாதமெலாம் ஆருமல் பார்த்திருப்பாய், அப்பாவோ
ஏதோ எழுத் தெழுதி எல்லாம் மறந்திடுவார்.

எப்போதும் எழுதி எழுதி விளையாடுகிறூர்.
தப்பித் தவறியங்கே தலைநீட்டி நான் பார்த்தால்
'என்ன குறும்படா!' என் றென்னை ஏசுகிறுய்.
சின்னஞ் சிறிய சிணுக்கு நான் செய்தாலும்
'அப்பா எழுதுகிறுர்' என்றே அதட்டுகிறுய்.
எப்போதும் இந்த எழுத்தென்ன விளையாட்டோ?
அப்பாவின் பேஞ்வைத் தூக்கி அவர் புத்தகத்தில்
தப்பொன்று மில்லாமல் தானுவும் ஓனுவும்
வாஞ வனைவும் வரையத் தொடங்கி விட்டால்,
ஏனம்மா, என்னை நீ ஏதேதோ திட்டுகிறுய்?
எப்போதும் அப்பா எழுதுகிறுர், ஆனுல் நீ
அப்பாவை மட்டும் அதட்டவில்லை. ஏனம்மா?
எத்தனை தாளில் எழுதிக் குவிக்கின்றுர்?
அத்தனைக்கும் சும்மா இருக்கின்றுய். ஆனுல் நான்
பாதிக் கிழிசல் எடுத்துப் படகு செய்தால்
ஏதேதோ பேசி யென்னை ஏசுகிறுய். அப்பாவோ
காகிதங்கள் கோடி கறுப்பாக்கிப் போடுகிறுர்.
போகட்டும் என்றே பொறுத்திருப்பாய், ஏனம்மா?

## 13

குழந்தை ஏதாவது திடீரென்று, தூக்கம் கலைந்து அழு தால், அதற்குக் காரணம், குழந்தையின் தூக்கத்தைத் திருடிச் செல்கின்ற ஒரு தேவதை என்பது, வங்காளக் கிராம மக்களி டையே உலாவி வரும் பழைய நம்பிக்கை. தன் தம்பியோ தங்கையோ தூக்கம் சிதைந்து அழுவதைப் பார்த்து வருந்தும் ஒரு குழந்தை பேசுவதாக அமைந்துள்ளது இந்தப்பாடல்.

### தூக்கம் திருடி

உச்சி வெயில் வேளை; ஒக்கற் குடத்துடன்
ஊருணிக்கு அம்மாவும் போனதன்பின்,
பச்சைக் குழந்தைக்கண் பாவையுள் தூக்கத்தைப்
பாவி யார் வந்து பறித்தனரோ?

சுற்றித் திரிந்தெங்கும் துள்ளி விளையாடிச்
சோர்ந்திட்ட பிள்ளைகள் தூங்கினரால்;
வற்றி வறண்டிடும் குட்டத்தில் வாத்துக்கள்
வாயடைத்துப் போய் ஒடுங்கினவால்.

ஆலமரத்தடி நீழலில் சாய்ந்த வோர்
ஆட்டிடையன் கண் அயர்ந்தனன், மாஞ்
சோலை மருங்குள சேற்றினில் ஓர் கொக்கு
சுத்த சமாதி அழுந்தியதால்.

‘ தூக்கம் திருடி ’ ஒருத்தி வந்தாள்; மெல்லத்
தூங்கும் குழந்தை அருகு சென்றாள்;

தூக்கம் பறித்ததைத் தூக்கி எங்கோ அந்தத்
துட்டத் திருடி பறந்து விட்டாள்.

வீடு திரும்பினள் அம்மாவும்; பிள்ளை
விட்டுச் சென்றபடி தூங்காமல்,
காடுமே டெல்லாம் உருண்டு தவழ்ந்து
கத்துதல் கண்டு திகைத்து நின்ருள்.

பச்சைக் குழந்தையின் தூக்கம் திருடிய
பாவியை நானும் பிடித்து விட்டால்
நிச்சயமாகச் சிறையினில் போட்டொரு
நீள விலங்கிட்டுக் கட்டி வைப்பேன்.

குண்டும், குழியும், கூன் பாறையும், தீ விழி
கொட்டிடும் கல்லும் குவிந்த வழி
முண்டிப் பிளந்து கசிந்து வரும் சிறு
முத்தருவிக் குகை தேடிடுவேன்.

வன்னப் புருக்கள் முனங்கிடும் சோலையில்,
வான்மீன் அமைதி சுடர் இரவில்,
கின்னரப் பெண்கள் சிலம்பு கிணுக்கெனக்
கீத மிசைக்கும் மகிழ்நிழலில்,

எங்கும் எட்டி எட்டிப் பார்த்திடுவேன், காணும்
யாரிடமும் இது கேட்டிடுவேன்;
எங்கு நான் தேடும் அக் கள்ள மகளும்
இருக்கிருள் உண்மையைச் சொல்லும்
என்பேன்.

பச்சைக் குழந்தையின் தூக்கம் பறித்த அப்
பாவி மகளை நான் கண்டு விட்டால்,
நிச்சயமாக ஓர் பாடம் அவள் நெஞ்சில்
நிற்கப் புகட்டவும் நேரேனோ?

எங்கிருந்தாலும் புகுந்தவள் வீட்டினில்,
எங்கணும் சோதனை போட்டிடுவேன்;
எங்கிருந்தோ கொள்ளை கொண்டு வந்த துயில்
எங்கே பதுக்கினள் என்றறிவேன்.

அத்தனை தூக்கமும் சூறையிட்டே, அவை
அள்ளிச் சுமந்தே என் வீடு செல்வேன்;
பத்திரமாய் அவள் பாரிச் சிறகை வார்ப்
பட்டையைக் கொண்டிங்கே கட்டிவைப்பேன்.

சேற்றினில் நீலமும் கோரையும் மண்டிச்
சேரும் செறிவினில் மீன் பிடிக்க
ஆற்றங்கரையில் அவளை வைப்பேன், தூண்டில்
ஆகத் துரும்பொன் றளித்திடுவேன்.

அந்திப் பொழுதினில் சந்தை அடங்கிட
ஆடி இருள் விழும் போதினிலே,
சொந்தமாய்த் தாயின் மடியில் குழந்தைகள்
சோதியெனச் சுடர் வேளையிலே,

'ஏதடி கள்ளி, யாரிடம் போய்த் துயில்
எத்திப் பறிப்பாய்' எனச் சிரித்து,
காது செவிடு படும்படி கத்திடும்
கங்குற் பறவையின் கூட்டமெலாம்.

## 14

குழந்தையைப் பறிகொடுத்த தாய், அந்தக் குழந்தையே தனக்கு ஆறுதல் கூறுவதாக எண்ணுகிருள். 'போனல் என்ன, அம்மா ? போகும் நேரம் வந்தது, போனேன். ஆனல், நீ காணும் எந்தப் பொருளிலும் நான் இருப்பேன். ஆமாம், காற்ருய், இலையின் அசைவாய், மின்னலாய், மழையாய், உன்னிடம் வருவேன். கவலைப் படாதே. தேடாதே. நான்தான் எங்கும் இருக்கிறேனே, உன் உயிரில் இருக்கிறேனே!' என்று இறந்த குழந்தை தன் தாயிடம் பேசுவதாகப் பாடல் அமைந்துள்ளது. இறந்த குழந்தை பேசுமா? பேசாதுதான். ஆனல் இழந்த குழந்தையை, பார்க்கும் பொருளிலெல்லாம் காணும் தாயின் பேதை உள்ளம் தவிக்கின்ற தவிப்பே, இப்படிக் குழந்தை பேசுவதாக வடிவெடுக்கிறது.

### முடிவு

பொழுது கழிந்தது, அம்மா, நான்
போகும் நேரம் வந்தது. இருள்
கழியும் உதயத் தனிமையிலே,
கரங்கள் நீட்டி, என் தொட்டில்
துழவி, என்னைத் தேடாதே;
துயரப்படாதே; நான் போகும்
பொழுது வந்தது, போகின்றேன்;
போனல் தேடி வருந்தாதே.

காற்ருய் உன்தன் முகம் வருடிக்
கட்டித் தழுவி மகிழ்ந்திடுவேன்;
ஆற்றில் ஆட நீ வந்தால்,
அலையாய் வருவேன் முத்தமிட;
ஊற்றும் மழையில் மரங்களெலாம்
உதறித் துடிக்கும் புயல் இரவில்,
தேற்ற வருவேன் இலைக்குரலாய்,
சிரித்து வருவேன் மின்னொளியாய்.

இரவில் தூக்கம் இல்லாமல்
எழுந்தெழுந்து படுத்திடுவாய்;
பெருகக் கண்ணீர், எனை எண்ணிப்
பித்தியாகிப் படுக்கையில் நீ
புரளும் போது, மீன் கணங்கள்
புரளும் வானில் இருந்தே நான்
குரலும் கொடுப்பேன், குலவியுனைக்
கொஞ்சி உறங்கப் பாடிடுவேன்.

மெத்த அயர்ந்து தூங்கிடுவாய்;
மேவி நிலவின் அலைகளிலே,
சத்தம் காட்டாது உன்னருகிற்
சார்வேன், மார்பிற் சாய்ந்திருப்பேன்;
முத்தமிடுவேன், உன் விழியின்
முனையும் சிறிது திறந்தால், உன்
சித்தம் புகுந்து சுடர்க்கனவாய்ச்
சேர்வேன் உன்தன் உறக்கத்தில்.

கண்ணை விழித்துக் கலங்கி, எனைக்
காணத் தவிப்பாய்; இருள்படர்ந்த
விண்ணில் இமைக்கும் மின் மினியாய்
விரைந்து மறைவேன்; பண்டிகையில்
அண்டை அயலார் குழந்தைகள் வந்து
ஆடிப் பாடும் போது, குழற்
பண்ணின் துடிப்பில் நாளெல்லாம்
படிந்து புகுவேன் உன்நெஞ்சில்.

அருமை அத்தை வந்திடுவாள்,
அன்புப் பரிசு கொணர்ந்திடுவாள்;
பெருமையோடு 'பெண்ணே, உன்
பிள்ளை எங்கே?' எனக்கேட்பாள்.
'கரிய விழியின் மணியானன்;
கலந்தான் உடலில், உயிரில்,' என
உரிமையோடுன் மென்குரலில்
உருகிச் சாவை உணர்த்தம்மா!

## 15

வானின் முத்தத்தை மண்ணுக்குக் கொணர்ந்தது குழந்தை. என்றாலும் நம்மைப் பார்த்து ‘வழி எது’ என்று கேட்கிறது. நம்முடைய வாழ்த்தை எதிர்பார்க்கிறது. வாழ்த்துவோம். நமக்குத் தகுதி இல்லை. என்றாலும் வாழ்த்துவோம். ‘குழந்தாய், வாழ்க்கைக் கடலில் உன் சிறு படகு செல்லும் போது, வானத்திலிருந்து அருட்காற்று வந்து, உன்னைக் கரை சேர்க்கும்’ என்று வாழ்த்துவோம். நம்மிடம்—நம்மிடங்கூட—அசையாத நம்பிக்கை வைத்துள்ள இந்தக் குழந்தைக்கு இது கூட நாம் செய்ய வேண்டாமா?

### வாழ்த்து

வாழி இந்தப் பிஞ்சுள்ளம்;
　　வாழி இந்த வெள்ளை மனம்;
வாழி மண்ணை முத்தமிட
　　வானைக் கொணர்ந்த இந்த உயிர்.
ஆழிக் கதிரோன் ஒளியை இவன்
　　ஆசையோடு தழுவுகிறான்;
தாழா அன்பு தவழத் தன்
　　தாயின் முகமும் கொஞ்சுகிறான்.

புழுதி என்றே இம்மண்ணைப்
　　புறக்கணிக்கப் பழகவில்லை;
தொழுது பொன்னை அதன் பின்னே
　　சுற்றித் திரியப் பயிலவில்லை;

வழிகள் நூறு பின்னும் இருள்
வாழ்க்கைச் சந்தை வந்துள்ள
மழலைச் செல்வன் இவனையும் நீ
மார்போடு அணைத்து வாழ்த்து ஐயா.

இந்தக் கூட்டந்தனில் உன்னை
எப்படித்தான் தேர்ந்தானோ?
வந்துன் வாசற்படி ஏறி
வழியைக் காட்டு என்று உன்கையை
எந்தவண்ணம் பற்றினனோ?
ஏதும் ஐயம் இல்லாமல்,
சிந்திச் சிரிப்பும் இன்சொல்லும்
தொடர்வான் உன்னை வழியெல்லாம்.

உன்பால் நம்பி வந்த இவன்
உறுதி காப்பது உன் கடமை.
அன்பால் இவனை நேர் வழியில்
அழைத்துச் செல்வது உன் பொறுப்பு.
துன்பக் கடலின் அலை மோதிச்
சுழன்று தாக்க, இவன் தோணி
என்ன ஆகுமோ என்ன
ஏக்கம் உறுதே; கடல் நடுவில்,

வானில் இருந்து காற்றொன்று
வந்து, படகின் பாய் நிறைக்க,
ஆனு அமைதித் துறையை இவன்
அணைய அருள், என்று அருள்வடிவே

ஆன பொருளை இறைஞ்சு ஐயா!
அவசரத்தில் மறந்து இவனை
ஏனோ என்றிராது உன்தன்
இதயத்திருத்தி வாழ்த்து ஐயா.

# 16

காதலின் பரவசத்தில் ஏதேதோ பேசிய தன் காதலனைப் பார்த்து, 'இதுவெலாம் உண்மையா?' என்று காதலி கேட்கிருள்.

இதுவெலாம் உண்மையா, காதல, நீ சொலும்
இதுவெலாம் உண்மைதானு?
கதிரென என்விழி மின்னினுல் உன்உளம்
காரெனக் கறங்குமோ? நீ
முதன்முதல் உணர்ந்தவோர் காதலாம் தெய்விக
முகைஅவிழ் தேனும், என்தன்
இதழிலே இன்னமும் இசையுமோ? நீ சொலும்
இதுவெலாம் உண்மைதானு?

துஞ்சிய பங்குனி நினைவெலாம் இன்னமும்
துன்னுமோ இந்த உடலில்?
பஞ்சென என்பதம் படுமுனம் சிலிர்த்து மண்
பண்ணுதிர் வீணையாமோ?
விஞ்சையாய் என்னையும் காண்பதால், இரவிருள்
விழியினில் பனி தவழுமோ?
வஞ்சியாய் எண்ணி என் சாயலில் மயங்கியே
வைகறை துள்ளி வருமோ?

எண்ணிலாக் காலமும், தேசமும், தனிமையில்
என்னை உன் அன்பு தேடிக்
கண்டதோ முடிவினில்? கண்டதும் யுகமெலாம்
கண்ட உன் நீண்ட தாபம்
வண்மை என் கூந்தலில், இதழினில், விழியினில்,
வாக்கிலே தவழ் இனிமையில்,
கண்டதோ அமைதியை, கண்டதோ நிறைவினை,
காதல, உண்மைதானா?

உண்மையா, இதுவெலாம் உண்மையா, காதல,
உண்மையா, உண்மைதானா?
உண்மையே என்றிடில், எல்லை இல்லாமலே
ஓங்கிடும் அகண்ட மாயம்
உண்மையாய் என் சிறு முகத்திலும் எழுத்தென
ஒளிருமோ, உண்மைதானா?
உண்மையா, இதுவெலாம் உண்மையா, காதல,
உண்மையா, உண்மைதானா?

# 17

'நேரமாகி விட்டது, வா, உடனே வா. உன்னை அலங்காரம் செய்து கொள்வதிலேயே பொழுதைப் போக்கி விடாதே. உள்ளபடியே வா. அதுபோதும்' என்று காதலியை அழைக்கிறான் காதலன்.

உள்ளபடியே நீ வா, வா.—வீணாய்
ஒப்பனையில் பொழுது ஓட்டி விடாதே.
அள்ளிச் செருகிய கூந்தல்—சற்றே
அவிழ்ந்து வகிடும் கலைந்திருந்தால் என்ன?
துள்ளிடும் நெஞ்சினில் வெட்கம்—துள்ளத்
தூக்கிய கச்சும் நெகிழ்ந்திருந்தால் என்ன?
கொள்ளை முலைக் குவை மேலே—தொய்யிற்
கோலத்தைக் கூட்ட மறந்துவிட்டால் என்ன?
உள்ளபடி இங்கு வா, வா.—வீணாய்
ஒப்பனையில் பொழுதோட்டி விடாதே.

பைம்பொன் நிகர்த்த புல்மேலே—கொஞ்சும்
பாதம் பெயர்த்து விரைந்து நீ வா, வா.
செம்பஞ்சுப் பூச்சும் வழியில்—புல்லில்
தேய்ந்து கரைந்து மறைந்து விட்டால் என்ன?
அம்பொற் சிலம்பும் நெகிழ்ந்தால்—மார்பின்
ஆரத்து முத்தும் அறுந்துதிர்ந்தால் என்ன?
பைம்பொன் ஒளிப் புல்லின் மேலே—பட்டுப்
பாதம் பதித்து விரைந்து நீ, வா, வா.

கன்னங் கரிய கார் மேகம்—வானைக்
கட்டிக் கவிந்து மறைத்தது காணாய்;
முன்னித் திரள் திரளாக—நாரை
மூண்டு பறந்தன அக்கரை மேட்டில்;
மன்னி எழும் மழைக் காற்றோ—பொட்டல்
மார்பின் மேல் விட்டு விட்டே அடித்தாடும்;
துன்னும் வெருட்சியில் மந்தை—துள்ளித்
தொட்டியில் உள்ள தம் கொட்டிலுக் கோடும்.
உள்ளபடி இங்கு வா, வா.—வீணாய்
ஒப்பனையில் பொழுதோட்டி விடாதே.

அழகு முகத்தினைக் காட்ட—சுடர்
ஆடும் சிறுவிளக் கேற்று கின்றாயோ?
மழையின் இருண்டு மருளும்—உன்தன்
மாயக் கயல்விழி கண்டவர், கொஞ்சி
இழையும் உன்தன் இமைக்கு இன்று—மையும்
எழுத மறந்ததை எண்ணிடுவாரோ?
பொழுது கழிந்தது உன் தீபம்—நொடியில்
பொக்கெனக் காற்றினில் பொன்றி விடாதோ?

உள்ளபடியே நீ வா, வா.—உடை
ஓரம் கிழிந்து கசங்கி விட்டால் என்ன?
கள்ளலர் மாலையும் இல்லை—கையில்
கங்கணம் பூட்டவும் இல்லை என்றால் என்ன?

வெள்ளம் இருண்டது வானில்—கூடும்
வேளை கழிந்திடும், நேரம் அழிந்திடும்;
உள்ளபடி இங்கு வா, வா.—பொழுதை
உன்னைச் சிங்காரித்தே ஓட்டிவிடாதே.
உள்ளபடி இங்கு வா, வா.—வீணாய்
ஒப்பனையில் பொழுதோட்டி விடாதே.

## 18

இளவரசன் பவனி வரப் போகிருன். முன்னமே, அவனிடம் நெஞ்சைப் பறிகொடுத்த ஏழைப் பெண் ஒருத்தி, பரபரப்புடன் தன்னைச் சிங்காரித்து நிற்கிருள். பவனி வரும் இளவரசன் முன்னே, தன் கழுத்துக் காறையை வீசுகிருள். அவன் திரும்பியும் பார்க்கவில்லை. இளவரசனுடைய தேர், தெருவில் விழுந்த காறையை நொறுக்கிப் போகிறது. இது தான் கதை. இதனை, 'அடி, பேதையே!' என்று மலைத்து நிற்கும் தன் தாயிடம் அந்தப் பெண்ணே சொல்வதாக அமைந் துள்ளது இந்த எளிமை நிறைந்த பாடல்.

தமிழனுக்கு, இப்பாடலில் உள்ள கருத்து 'முத்தொள்ளா யிர'த்தை நினைவூட்டும்.

அம்மா, அம்மா, கேட்டாயா?
அரசன் மகனும் வருவானும்.
நம் வீட்டின்முன் பவனி வந்து
நடை உலாவிச் செல்வானும்.
சும்மாச் சும்மா உழைத்துழைத்துச்
சுருண்டு கிடக்க மனமில்லை.
அம்மா, பின்னிவிடு; சரிகை
அரக்குப் புடவை உடுத்திவிடு.

என்ன அம்மா, இப்படி நீ
ஏதோ மலைத்து நிற்கின்ருய்?
சன்னற் பக்கம் நான் நிற்கும்
சாடை கூட அவன் குறியான்;

நன்ருய்த் தெரியும், இமைப் பொழுதில்
நமது வாசல் கடந்திடுவான்.
என்தன் பார்வை தொடராத
எங்கோ சென்று மறைந்திடுவான்.

போன தொலேவில் எங்கிருந்தோ
புல்லாங் குழலின் குரல்பேசும்
கானம் என்னே நோக்கி வரும்,
கரைந்து காற்றில் மறைந்து விடும்.
ஆனால், அம்மா, நம்வாசல்
அருகில் அவனும் வருவான் பார்;
நானும் அழகு படுத்தி என்னே,
நன்ருய் இருக்க வேண்டாமா?

அம்மா, நமது வாசல்முன்
வந்தான், வந்தான் இளவரசன்;
விம்மி வெயிலும் துள்ளி அவன்
விரையுந் தேர்மேல் மின்னியது.
சும்மா முகத்துச் சல்லாவைத்
தூக்கி எறிந்தேன்; வெளிதன்னே
அம்மா, பார்த்தேன். தவரு? பின்
அவ்வாறு எனேஏன் பார்க்கின்ருய்?

என்தன் கழுத்தில் இருந்த சிவப்பு
இழைத்த காறை தனே இழுத்து,
வந்த அவன்முன் வாசலிலே
வீசி எறிந்தேன்; குனிந்து அவனும்

என்தன் பரிசை எடுக்கவில்லை.
இல்லை; நன்றாய்த் தெரியும்; அஃதைப்
பொன்தேர் நொறுக்கிப் போயிற்று;
புழுதி சிவப்பாய் மாறிற்று.

ஆனால் என்ன, இளவரசன்
அம்மா, வந்தான் வாசலிலே.
நானும் எனது நெஞ்சிலுள்ள
நகையை எறிந்தேன் அவன்முன்னே.
ஏனோ எவர்க்கோ எதுவென்றோ
யாருக்கும் அது தெரியாது. இங்கு
ஆனது இதுவே, அம்மா நீ,
ஐயோ, மலைத்து ஏன் நிற்கின்றாய்?

## 19

‘ஏதோ வருகிருன், போகிருன். நமக்கென்ன?’ என்கிருள் காதலி. ஒன்றுந்தான் இல்லையே, பின் ஏன் பேசுகிருன்?

ஒரு நாட் போல வருகிருன், போகிருன்.
தோழி அவனிடம் சென்று என் கூந்தலில்
சூடிய மலர் இதைச் சேர்த்திடு. யாரிதை
அனுப்பியது? என்பான். என்ருல், என்ருல்,
ஐயோ, பெயரைச் சொல்லி விடாதே.
நமக்கென்ன, ஏதோ வருகிருன், போகிருன்.

வந்து மரத்து அடிப் புழுதியில் தங்குவான்,
இந்தா, மலர்களும் இலைகளும். இவற்றை
அங்கே, அந்த மரத்தின் அடியிலே,
பரப்பிவை. பாவம், என்னவோ முகத்தில்
ஏதோ சோகம், என்ன சோகமோ,
எனது நெஞ்சிலும் புகுந்தது. அவனே
மனத்தில் உள்ளதைச் சொல்லவே மாட்டான்.
நமக்கென்ன, ஏதோ வருகிருன், போகிருன்.

## 20

'இளவேனில்; அந்திப்பொழுது. இந்த இளவேனிலைப் போலவே உன் பூக்கரங்களை நீட்டு' என்று காதலியிடம் வேண்டுகிறான் காதலன். கிராமியப் பாடல்.

முகத்தைத் திருப்பிடாதே, முத்தம்மா,—முந்தி
முந்தி வந்து சொக்கு திள வேனிலும்;
அகத்தைத் திறந்தழகு காட்டுது—விஞ்சும்
ஆசை கொஞ்சும் பூக் கரங்கள் நீட்டுது.

காட்டுத் தழை சலசலக்கும் பொம்மலோ—துயர்க்
கண்கலங்கி மாலை சிந்தும் விம்மலோ?
மேட்டு வயல் வானமெங்கும் அள்ளுது—மெள்ள
மெள்ள வந்து காதில் இங்குத் துள்ளுது.

ஆடி ஆடி ஆடி ஆடிப் பூக்களும்—நடம்
ஆடும் தோப்பில் ஆடுமிந்த இருளிலே
கூடிக் கூடி ஏதெதுவோ பேசுது—கொள்ளை
கொள்ளையாய் இரகசியங்கள் வீசுது.

முகத்தைத் திருப்பிடாதே, முத்தம்மா,—ஒளி
முழுநிலவு முகமெனக்குக் காட்டடி.
அகத்தைத் திறந்து கொட்டி ஆசையாய்—உன்தன்
அழகு கொஞ்சும் பூக்கரங்கள் நீட்டடி.

## 21

'ஆற்றங்கரைப் பாதை; அந்திவேளை; இடுப்பில் குடத்தோடு நடந்து வந்தாய். சரேலெனத் திரும்பி, ஆடும் முகத் திரையின் வழியே, என்னை எட்டிப் பார்த்தாய். ஏன்? நீயோ எட்டாத உயரத்தில் உள்ள நட்சத்திரம். நானோ ஒரு நாடோடி. ஏன் என்னை அப்படிப் பார்த்தாய்? ஏன், ஏன்?' என விம்முகிறான் காதலன்.

படுகை மேட்டினிலே—வளைந்த
பாதைத் திருப்பத்திலே,
குடம் இடுப்பினிலே—கொஞ்சக்
கொடியென நடந்தாய்.

சரேலெனத் திரும்பி—முகத்துச்
சல்லாவினை விலக்கி,
இரு விழியாலே—ஏனோ
எட்டி எனைப் பார்த்தாய்?

திரைப் புனல் மார்பு—விம்மவோர்
சிலிர்ப்பை ஓடவிட்டு,
கரை இருள் தேடி—விரையும்
காற்றதனைப் போல,

விளக்கில்லா அறையின்—இருட்டு
வெறுமையின் குறுக்கே,
பளிச்செனப் பறந்தே—இரவுட்
பாயும் பறவையைப் போல்,

அந்தி மயக்கத்திலே—அந்த
ஆற்றங் கரை அருகே
வந்தெனை நோக்கி மின்னி—உன்விழி
மாயம் துடித்ததடி.

வானம் தொடும் வரைமேல்—மறைந்து
வாழ்ந்திடும் தாரகை நீ.
நானோர் வழிப்போக்கன்—தெருவை
நச்சிடும் நாடோடி.

படுகை மேட்டினிலே—வளைந்த
பாதைத் திருப்பத்திலே,
குடம் இடுப்பினிலே—கொஞ்சக்
கொடியென நடந்தாய்.

கொடியென நடந்தாய்—முகக்
கோலத் திரை விலக்கி,
சுடரும் உன்விழியால்—என்னைச்
சுட்டதும் ஏனோடி?

## 22

அந்திவேளை, உலகெங்கும் பிரிவின் தாபம் நிறைகிறது. ஆம், உயிரோடு உயிர் சேரத் துடிக்கும் அந்த வேதனையே அந்தி இருளின் மூச்சாகத் தவழ்கிறது. இப்படி எண்ணுகிறான் காதலன்.

இத்தனைக்கும், காதலி பக்கத்திலேதான் இருக்கிறாள். இருந்தும் என்ன? அவள் கையை இறுகப் பற்றலாம்; அவளுடைய இருண்ட விழியைப் பசியோடு நோக்கலாம்; ஆனால், அவள் உயிரை, அதன் மாய அந்தரங்கத்தைத் தொட முடியுமா?

சூரியனும் மேற்றிசையில் களைத்துச் சாய்ந்தான்;
சூழும் இதோ காட்டில் இருள்; மேலே வானில்
ஆர் ஒளியின் ஒய்யாரம்; தயங்கி மெல்ல
அடிவைத்து நடந்து தரை நோக்கும் வெள்ளி.
பார் முழுதும் விம்முகின்ற பிரிவின் தாபம்
படர்ந்திங்கே அந்தி இருள் மூச்சாய் ஓடும்.
சேர்ந்திடவே துடிக்கின்றோம்; ஆசைத்தீயில்
சிதைந்துருகி அரற்றுகின்றோம்;
பயனொன்றில்லை.

என்றாலும் உன் கையை இறுகப் பற்றி,
ஏறு பசி என் விழியால் உற்று நோக்கி,
உன் விழியைச் சிறைவைப்பேன்; உன்னைத் தேடி
ஓயாமல் நீ எங்கே, எங்கே, எங்கே?

உன்னுள்ளே ஆழத்தில் மறைந்து எங்கேயோ
உறைகின்ற அமர ஒளி எங்கே? என்ன
என்றென்றும் தேடி அந்த உண்மை ஒன்றை
எப்படியும் மருவிடவே ஏங்கி நிற்பேன்.

விண்ணுலக அந்தரங்கம் தனியாய், வானில்
மினுமினுக்கும் சிறு மீனில் துடிப்பதே போல்,
பெண்ணே, உன் இருண்டவிழி ஆழந்தன்னில்
பெருமாய ஆன்மஒளி பிறங்கும்; காண்பேன்;
கண்டதனைப் பேச்சிறந்த வியப்பில் ஆழ்ந்து,
கருத்தெல்லாம் ஒன்றி, முழு மனத்திஞேடும்,
எண்ணரிய பெருங்காதற் கடலில் வீழ்வேன்;
ஏகத்தில் எனைக்கரைப்பேன், இழப்பேன் முற்றும்.

## 23

‘ என் இதயம் காட்டுவெளிக்குப் பிறந்த சுதந்திரப் பறவை. உன் விழியாம் வானத்தில் பறக்க, சிறிது இடம் தேடி அது தவிக்கிறது ’ என்று தன் காதலியைப் பார்த்துப் பேசுகிருன் காதலன்.

என்தன் இதயம் காட்டுவெளி
        ஈன்ற பறவை; இன்று அதுவும்
உன்தன் விழியில் அதற்கேற்ற
        ஓங்கு வானம் கண்டதடி.
உன்தன் விழியே காலைஒளி
        உறங்கும் தொட்டில்; தாரகைகள்
வந்து நிமிர்ந்தே அரசாளும்
        வன்ன உலகும் அதுவேதான்.

என்தன் பாடல் உன் விழியின்
        எல்லை இல்லா ஆழத்தில்
சிந்தித் தன்னை இழந்தது காண்.
        சிறிதுஉன் விழியாம் நெடுவானில்,
என்தன் சிறகை விரித்திடவே
        இடமும் இருந்தால், மற்றங்கே
முந்து முகிலைப் பிளந்து, வெயில்
        முனையைக் கண்டால் போதுமடி.

## 24

காதலியின் புன்சிரிப்பு என்ற மலரைப் பெறுகிருன் காதலன். அவளோ அவன் வேதனையைப் பதிலுக்குப் பெற்று, பெருமை வேறு பட்டுக்கொள்கிருள். ஆனல் காதலன் பெற்ற மலர் வாடிவிடுகிறது.

புன்சிரிப்பு என்றவோர் பூவைத் தந்தாள் என்தன்
பொல்லாத வேதனை மாறு கொண்டாள்.
தன் சிறு கையினைத் தட்டி நின்ருள், வெற்றி
தன்னதென்றே களி துள்ளிச் சென்ருள்.

பித்தரைப் போல விழித்தது நண்பகல்,
பேய்த்தாகம் வானிலே சீறியது.
சித்தம் துடித்து என்தன் கூடையிற் பார்த்தேன்;
செம்மலர் செத்துக் கிடந்ததடா!

## 25

'காதலி போய்விட்டாள், திரும்பியும் பாராமல். இனி வாழ்வு உண்டா? வேண்டுமானுல், அவள் வடிவத்தை நெஞ்சிலே நிறுத்தி ஏதோ உயிர் சுமக்கலாம்' என்று காதலன் எண்ணுகிருன். ஆனுல் இங்கே உள்ள நேரமோ மிகக் குறைவு. வாடி வதங்கும் அழகையெல்லாம், அது மறைவதற்குள் இந்தக் குறுகிய வாணுளில் பெறவேண்டாமா? அவள் போனுல் என்ன, இதோ இன்னெருத்தி வந்துவிட்டாள், அழகு கொஞ்ச. போனவளை எண்ண நேரம் ஏது? தேவைதான் ஏது?

என்னைக் கைவிட்டு எங்கேயோ
ஏதோ போனுய் உன்போக்கில்.
உன்னை எண்ணி, உருகி, நிதம்
உன்தன் உருவம் ஒன்றனையே
என்தன் மனத்தில், பொன்பாடல்
இசையாய் நிறுத்தி, உயிர்சுமப்பேன்
என்று நினைத்தேன். அட, விதியே,
இதற்கு நேரம் இல்லையடி.

ஓடி ஒடுங்கும் நாளுடனே
ஓடித் தேயும் இவ்விளமை;
ஆடி வரும் இவ் இளவேனில்
ஐயோ, பறந்து மறைந்துவிடும்;
வாடி ஏனே மென்மலரும்
வதங்கி மாயும்; தாமரைமேல்
ஆடும் பனியே வாழ்க்கையென
அறிஞர் விடுப்பார் எச்சரிக்கை.

என்னைத் திரும்பிப் பாராமல்
எங்கோ சென்ற ஒருத்தியை நான்
இன்னும் எண்ணி, அவள்போன
இடத்தைப் பார்த்து நின்று, இங்கே
முன்னும் அழகை ஒதுக்கிவிட்டால்
முரட்டு மடைமை ஆகாதோ?
என்ன செய்வேன், எனக்கு உலகில்
இருக்கும் நேரம் கொஞ்சமடி.

எழுந்து பாதம் கலகலென
இங்கே வருவாய், மழை இரவே!
எழுந்து முறுவல் கொஞ்சிட, வா,
இலை உதிர் காலம் எனும் பொன்னே!
எழுந்து முத்தம் சிந்தி, வெளி
எங்கும் திரிந்து, திரிந்து, பனிக்
கொழுந்து உடுத்திக் கோலஒளி
குலவ வருவாய் பங்குனியே!

நீ வா, நீ வா, நீயும் வா,
நீங்களே என் காதலிகள்.
சாவு நமக்குச் சரதம் எனச்
சமைந்தோம்; தனது நெஞ்சு எடுத்துப்
பாவி ஒருத்தி போய்விட்டால்,
பதிலுக்கு உள்ளம் உடைந்து இங்கே
ஆவி குலைதல் அறிவாமோ?
அதற்கு நேரம் நமக்கேது?

ஏதோ மூலையில் இருந்து புது
எதுகை மோனை பலகூட்டி
நீதான் எனக்கு யாவுமென
நீள இசைத்தால் இனியதுதான்;
வேதனைக்கு மாற்று எதுவும்
வேண்டேன் என்று வீம்புடனே
ஏதும் விடாமல் பழந்துயரை
இறுக்கி அணைத்தால் வீரந்தான்.

ஆனால் வேறோர் அழகு முகம்
அதற்குள் வீட்டுப் படியேறி,
தேனைப் பொழியும் விழி உயர்த்திச்
சிரிக்கும்; என்தன் கண்ணீரை
நானே துடைப்பேன்; என்பாடல்
நடந்த துறையை மாற்றிடுவேன்.
ஏனோ? இதுவும் தெரியாதா?
இருக்கும் நேரம் கொஞ்சமடி.

## 26

அவள் போகும்போது, சேலைத் தலைப்பு அவனைத் தொட்டது. காதல் உள்ளத்திற்கு இது போதாதா ?

சிற்றடி துள்ள நடந்தனள்—செல்வச்
சீரடி மின்ன விரைந்தனள்—அந்தப்
பொற்றொடி சேலையின் பொன்முனை—அவள்
போகிற போதென்னைத் தொட்டது.

அந்தக் கணத்தினில் நெஞ்சமாம்—மாய
அந்தரத் தீவின் வெளியினில்—நின்று
வந்த மலர்த்தண் வசந்தத்தின்—இன்ப
வாச உயிர்ப்பு என்னைத் தொட்டது.

கட்டவிழும் மலர் மெல்லிதழ்—ஒன்று
காற்றில் மிதந்து தவழ்ந்ததோ—எனத்
தொட்டும் தொடாமல் இமைப்பினில்—துகில்
தொட்ட சிலிர்ப்பு மறையினும்,

பைந்தொடி பொன்னுடல் விம்மலோ—அவள்
பைய மிழற்றிடும் மென் சொலோ—என
வந்தென் உளத்தை நிறைத்தது—அந்த
வண்ணமயிற் சேலைப் பொன்முனை.

## 27

'என்னை ஏன் அப்படிப் பார்க்கிறாய்? என்னை முழுதும் உணரவா? நான்தான் என் வாழ்வு அனைத்தையும் உன்முன் வைத்து விட்டேனே? பிறகு? இன்னும் இந்த உள்ளத்தின் ஆழத்தைக் காண முடியவில்லையா? என்ன செய்வது? அது மனித உள்ளம். அப்படித்தான் அலகிட முடியாமல் இருக்கும். ஆனால் ஒன்று. நீதான் அதன் அரசி' என்று பேசுகிறான் காதலன்..

ஏதோ உன்தன் விழியுள்ளே
எழுந்து வினவும் ஒரு துயரம்.
சீதக் கடலின் ஆழமெலாம்
தெளியத் துடிக்கும் நிலவைப்போல்
ஏதுஎன் பொருள் என்றுஉன் விழிகள்
என்னைத் துருவும். எனில் நானே
ஆதி முதலாய் என் வாழ்வில்
அனைத்தும் உன்முன் வைத்துள்ளேன்.

ஏதும் ஒளிக்கவில்லை, இங்கே
எதையும் மறைக்க முயலவில்லை.
யாதும் வைத்தேன் உன்முன்னே;
அதனால்தானே நீ என்னை
ஏதும் அறியா திருப்பதுவும்?
இதற்கென் செய்வேன்? எழிற்கொள்ளைச்
சோதி வயிர மணியாகச்
சுடரும் என்தன் உள்ளமெனில்,

நூறு சுக்காய் உடைத்துப் பொன்
        நூலிற் கோப்பேன், தாபமெலாம்
ஆற உன்தன் கழுத்தினிலே
        அணிந்து களிப்பேன். இன்பவெறி
ஏறும் வண்ணச் சிறுவட்ட
        மலராய் இருந்தால், உன் கூந்தல்
ஏறும் படிக்குக் கொய்து உன்தன்
        எழிலுக் கெழிலாய்ச் சூட்டிடுவேன்.

ஆனல் அதுவோ மணியில்லை,
        அழகைப் பொழியும் மலரில்லை.
ஆஞ அகண்டக் கடலாக
        ஆழ்ந்து விரிந்த மனித உளம்.
ஆன படியால் அதன் எல்லை
        அறியாது ஏங்கி அலமருவாய்.
ஆனல் அன்பே, அதை முழுதும்
        ஆளும் அரசி நீஅன்றே?

ஏதோ அற்ப சுகமானல்
        எளிதில் நகையாய் அலர்ந்திடும், அப்
போது நீயும் எளிதில் அதன்
        பொருளைக் காண்பாய், மிகச் சிறிய
வேதனை தான் அதுவென்னில்,
        விழியின் புனலாய் உருகி விடும்.
ஏதும் விளக்கம் வேண்டாமல்
        இரகசியத்தைக் கொட்டிவிடும்.

அன்பே, இதுவோ அன்பென்னும்
அருமை; எனவே அது கொணரும்
இன்பம் துன்பம் இரண்டிற்கும்
எல்லை இல்லை; அது காணும்
நன்மை நிதிக்கும் நாளெல்லாம்
நாடும் நிதிக்கும் அலகில்லை;
உன்னோடு உயிர் போல் உளதெனினும்
உணராய் முழுதும் ஒருநாளும்.

## 28

பெண், அவள் அழகில் பாதிதான் இறைவன் படைத்தது. மற்ெருரு பாதி, ஆடவரின் அழியாக் கனவில் பிறந்தது.

பெண்ணே, உன்னை இறைவன்தான்
பேணிப் படைத்தான் என்பது பொய்.
எண்ணி எண்ணி மண்ணில் உன்னை
எடுத்து வனைந்தார் ஆடவரும்.
நண்ணும் அவர்தம் இதயத்தில்
நாளும் பெருகும் எழிலையெலாம்
பெண்ணே, அளித்து உன் அழகென்றே
பேசி அலைந்தார் என்றென்றும்.

பொன்னால் ஆன இழையால் உன்
புதுமை நெய்தார் கவிஞரெலாம்:
உன்னை அமரப் புதுப் பொலிவாய்
ஒளியில் வரைந்தார் ஓவியரும்;
மன்னும் முத்தைக் கடல் ஈயும்:
மண்ணுட் கனிகள் பொன் அருளும்:
வன்னச் சோலை மலர்தரும், உன்
வடிவை வரைவில் நிதியாக்க.

உன்தன் இளமை ஒன்றனையே
உன்னி உன்னிச் சலியாமல்,
முந்தும் ஆசைப் பெருங்கடலில்
முளைத்த வனப்பாம் அமுதொளியில்,

உன்தன் அழகை மெருகிடுவார்
உவந்து ஆடவரும்: அதனுல் உன்
விந்தைப் பெண்மை பாதி; எந்தம்
வீயாக் கனவு உன் மறுபாதி.

## 29

ஒருவரும் அறியாமல், இருட்டில்தான் போகிறேன், அவனைக்காண. ஆனால் என் காற் சிலம்பின் ஒலியே என்னைக் காட்டிக் கொடுத்து விடுகிறதே!

தனியாகத்தான் அவனுக்காகக் காத்திருக்கிறேன். ஆனால் என் நெஞ்சின் பதைப்புத்தான் உண்மையைத் தமுக் கடித்து விடுகிறதே!

வந்து விட்டான்; இரவு, ஏகாந்தம். அம்மாடி....இனி என்ன குறை? ஆனால்....ஆனால்......

இருளில் தனியே அவனைக் காண
ஏகும் அந்த நள்ளிரவில்,
குருவி ஏதும் கூவுவதில்லை,
குறுமென் காற்றும் அசைவதில்லை;
தெருவில் எங்கும் மோனம், ஆனால்
'சில்சில்' என்றென் சிலம்பொலியே
பெருகும் பாதம் பெயரப் பெயர,
பிய்க்கும், ஐயோ, வெட்கமடி.

வருவான் என்றே மாடத்து ஏறி
வழியை அளக்கும் வேளையிலே,
மரம் மீது இலைகள் அசையாது அயரும்,
மயங்கிக் காவல் மறந்து, துயில்
புரியும் ஒருவன் வாள்போல் ஆற்றுப்
புனலும் கிடக்கும்; பாழ் நெஞ்சோ,
திரியும், பதறும், சிந்தும், அதனைத்
தேற்ற வழியோ இல்லையடி.

இரவில் அவனே வருவான், என்தன்
இதயம் சிலிர்க்கும், இமை செருகும்;
திரையாய் மேகம் வானை மறைக்கும்,
‘செல்ல’க் காற்று விளக்கணைக்கும்.
மருவ நினைந்தால் மானம் குலைத்து என்
மார்பின் இழையே ஒளி சிந்தும்;
உருவி அதனை எங்கோ வீசி
ஒளிக்க வழியும் இல்லையடி.*

* இப்பாடலை நாயகி—நாயக முறையில் இறைவனைப்பற்றிப் பேசுவதாகவும் கொள்ளலாம்.

காதலியைக் கட்டி அணைப்பதால், அவள் எழிலை முழுதும், அதைமட்டும், தனியாக வடித்தெடுத்துத் தன்னுடைய தாக்கிக் கொள்ள முடியவில்லையே, உடலைக் கடந்து, உயிரோடு ஒட்டி நிற்கும் அழகு என்ற அந்த மாயத்தை எப்படித் தொடுவது ? என்று காதலன் மயங்குகிறான்.

கையினைப் பற்றிடுவேன்—அவளைக்
கட்டி அணைத்திடுவேன்.
தையல் அழகு என் கையில்—அகப்படத்
தவம் புரிந்திடுவேன்.

காதல் வெறியினிலே—முத்தம்
கணக்கின்றிச் சொரிவேன்.
சோதி அவள் முறுவல்—தன்னையே
சூறையிட முயல்வேன்.

பித்தம் பிடித்தவன் போல்—எழில்
பேசும் கருவிழியை
நித்தமும் என் விழியால்—பருக
நீள முனைந்திடுவேன்.

ஆனாலும் எங்கேயோ—ஐயோ
அழகும் எங்கேயோ?
வானைப் பிழிந்தெடுத்தால்—நீலம்
வடித்திட வருமோ ?

அழகை மட்டும் பிடித்து—கையில்
அடக்கிட முயன்றேன்.
விழல் உடம்பினையே—கண்டு
விம்மி மயங்கி நின்றேன்.

சிந்தை கலங்கியது—திகைத்துத்
திரும்பி வந்து விட்டேன்.
விந்தைத் துரிய மலர்—அதனை
வெறும் உடல் தொடுமோ?

## 31

'ஐயோ, இந்த இன்பம் தாங்க முடியவில்லை; இதிலிருந்து விடுபடவேண்டும். என்னைப் போகவிடு; என் ஆண்மையை மீட்க வேண்டும். மீட்டால், பிறகு, பிறகு, உனக்கே என்னை மறுபடியும் உரிமையாக்குவேன்' என்று காதலியிடம் முறையிடுகிறான் காதலன்.

தாங்க முடியவில்லை நீ தரும் இன்பம்—இந்தத்
தளையைத் தறித்தே என்னைப் போகவிடடி.
ஓங்கும் வெறி உள்ளத்தில் ஊட்டும் கள்ளடி— முத்தம்
ஒன்றுகூட இன்றெனக்குத் தாராதேயடி.

செறிந்து சுழலும் இந்தத் தூப நெடியில்—உள்ளம்
திக்கு முக்காடி மிகத் திகைக்குமடி.
திறந்து கதவையெல்லாம் காலை ஒளியும்—உள்ளே
திரிந்துவரக் கருணை காட்டிவிடடி.

கொஞ்சிக் குலாவி இன்பக் கூறையினுள்ளே—என்னைக்
கொடுக்காய் முடிந்துவைத்துக் களித்தாயடி ;
விஞ்சிப் பெருகும் உன்தன் அன்பு வெள்ளத்தில்—வீழ்ந்து
வீழ்ந்து முழுகி உயிர் கரைகுவேனடி.

மாளா உன் மந்திரத்தின் கட்டை அவிழ்த்தே—என்னை
மாறாத சுதந்திரன் ஆக விடடி.
மீளா என் ஆண்மையினை மீட்க விடடி—நெஞ்சை
மீண்டும் உனக்கு உரிமை ஆக்குவேனடி.

## 32

'எனக்குத் தெரியாமல் என்னை விட்டுப் போய்விடுவாயோ? என்றால் தாங்காது. அப்படிப் போய்விடாதே' என்று வேண்டுகிறாள் காதலி; கட்டளையும் இடுகிறாள்.

என்னிடம் அனுமதி பெறாமலே, காதல,
எழுந்து நீ போய்விடாதே.
உன்னை நான் காணவே இரவெலாம் தூங்காமல்
ஓய்ந்த கண் சோர்ந்து வீழும்.
என்னையும் மறந்து நான் உறங்கிடும் போது உன்னை
இழந்திடின் ஏது செய்வேன்?
என்னிடம் அனுமதி பெறாமலே, காதல,
எங்கும் நீ போய்விடாதே.

இதுவெலாம் சொப்பனம் இல்லையே என்று நான்
என்னையே கேட்டு நிற்பேன்;
கதுமெனக் கண்விழித் தெழுந்துனைத் தொடச்சிறு
கையினால் வெளி துழவுவேன்;
இதயமாம் தொழுவினில் இறுக்கி உன்தன் பதம்
என்றுமே புல்லுகின்ற
கதியிலேன் அனுமதி பெறாமலே போய்விடக்
காதல, கருதிடாதே.

## 33

‘இதோ காலை வந்தது’ என்று விடிவதற்குமுன் பாடும் குருவியின் குரல், கவிஞன் காதில் விழுகிறது.

காலைக்குருவி பாடும் அதற்குக்
காலை வருகை சொன்னது யார்?
நீலக் கங்குற் பாம்பு வானை
நெருக்கிப் பிடித்து நீண்டு இருளைக்
காலும் உடலால் சுற்றி வளைத்துக்
கட்டி அழுத்தும் போதே, இச்
சோலைக் குருவி காதில், ‘காலை
சூழ்ந்தது’ என்னச் சொன்னது யார்?

அந்த காரம் வானில் அடர,
அடர்ந்த தழையின் இருட் செறிவில்
உன்தன் கூட்டில் குருவீ, நீயோ
உறங்கிக் கிடந்தாய்; உன் கனவில்,
எந்த விதமாய்க் கிழக்கின் தூதன்
ஏறிப் புகுந்து ‘காலை இதோ
வந்தது’ என்ன உனக்குச் செய்தி
வழங்கிப் போனான் சொல்லாயோ?

முந்தும் கதிரோன் வந்தான் முடுகி,
முடிந்தது இரவும் எனப் பாடும்
உன்தன் குரலைக் குருவீ, பேதை
உலகம் நம்ப மறுத்தது காண்.

இந்த உறக்கம் போதும், விடடா,
எழுந்து இக் குருவி தன்னுடனே
வந்தது ஒளியாம் வாழ்வென்று இறைஞ்சி
வாழ்த்தி வண்ணம் பாடிடடா !

## 34

பனித்துளியும் சூரியனும் பேசிக் கொள்கின்றன.

'உன்னை எண்ணி உருகிடுவேன்
எனினும் உனக்குப் பணி புரிய
என்னால் முடியும் என்றெண்ண
இடமே இல்லை, கதிரவனே!
என்னுள், வானம் தாங்கும் உனை
எடுத்து அணைக்க இடமேது?
என்தன் வாழ்நாள் கண்ணீரே'
என நீர்த் துளியும் ஏங்கியது.

பகலோன் சொல்வான்: 'பனித்துளியே,
பரந்து விரிந்து வரம்பிகந்த
அகண்ட வெளிக்கும் ஒளி தருவேன்;
ஆனால் உன் போல் சிறுதுளிக்கும்
அகத்தின் பொருளாய் எனை முழுதும்
அளிப்பேன்; சிறிய ஒளிப்பொறியாய்
புகுந்துன் நெஞ்சில் நிறைவேன் நீ
பொலிந்து வானச் சுடராவாய்.'

## 35

மழைக்காலம். 'வீட்டுக்குள்ளேயே இரு' என்று குழந்தையைப் பார்த்துத் தாய் பேசுகிருள்.

வீட்டுக்குள்ளே இரு, கண்ணே—மழை
வீசி அடித்திடும் வானம் துடித்திடும்
வீட்டுக்குள்ளே இரு, கண்ணே!

காட்டு விளிம்பிற்கு மேலே—கனற்
கார் முகில் கோடி கணத்தினில் கூடும்.
மேட்டுக் குளக் கரை மீதில்—பத்தி
மீறிய தென்னே மரங்கள் உலேந்து
மூட்டத் திருண்டமும் வானில்—தலே
முட்டி முட்டி முட்டி முட்டியே மோதும்.
ஒட்டைப் புளியினிற் காகம்—குரல்
ஓய்ந்து கலேந்த சிறகொடு சாயும்.
—வீட்டுக்குள்ளே இரு....

வெள்ளேப் பசு வேலிப்பக்கம்—நின்று
வீறிட்டலறுது பார், அதைக் கொட்டில்
உள்ளே கொணரும் வரையில்—நீ
ஓடாமல் இங்கே இருந்திடு, கண்ணே!
வெள்ளம் நிறைந்த வயலில்—நீர்
விம்மி வழிந்திடும் குட்டத்து வாயில்
துள்ளித் தப்பியோடும் மீனேத்—தொட்டுத்
தொட்டுப் பிடித்திடத்துன்னினர் ஊரார்.
—வீட்டுக்குள்ளே இரு....

குறும்பு நினைந்து தன் தாயை—விட்டுக்
கும்மாளி போடும் சிறுவனைப் போலே
குறுகிய வீதியில் எங்கும்—மழை
கோல அருவிகளாய்க் குதித்தோடும்.
துறையினில் ஆறு கடக்க—யாரோ
'தோணிக்காரா' என்று கூவிடல் கேளாய்.
துறையினில் தோணி இன்றேது—பகல்
தூங்கி வழிந்தது வெய்யில் அழிந்தது.

—வீட்டுக்குள்ளே இரு....

நிறையுமிருள் வரலாச்சு—அந்தி
நேர விளக்கினை ஏற்றிடலாச்சு.
சிறிய குடங்கள் நிறைத்தே—வீடு
சேர நினைந்து விரைந்தனர் பெண்கள்.
வெறியினில் ஆடும் மழை மேல்—ஏறி
வேகச் சவாரி விசைத்தது வானம்.
சிறையினில் சிக்கியதே போல்—சீறிச்
சீறி இரைந்து சுழன்றிடும் ஆறு.

—வீட்டுக்குள்ளே 'இரு....

சந்தைக்குப் போகுமிச் சாலை—இன்று
சந்தடியின்றி வெறிச்சோடிப் போச்சு.
வந்து நதிக்குத் திரும்பும்—மிக
வாகான சந்தும் வழுக்கிடலாச்சு.

வெந்து முனங்கிடும் மூங்கிற்—கொத்தில்
        வீழ்ந்து வலைப்பட்ட வெம்புலி போலே
சிந்தை குமுறித் திமிறி—காற்று
        சிவ்வென்று பாடும் குடைந்திடும் சாடும்.

—வீட்டுக்குள்ளே இரு....

## 36

சிறுவனாய் இருந்த பொழுது, தன்னை வியப்பில் அழுத்திய மல்லிகை மலர்களைப் பற்றி, கவிஞன் நினைவு எண்ணுகிறது.

மல்லிகை, வெண்மலர் மல்லிகை, மல்லிகை.
மல்லிகை வெண்மலர்க் கொள்ளையை ஒரு நாள்
அள்ளி அள்ளிக் கையால் அணைத்தது
உள்ளத்தில் இன்றும் உள்ளது பசுமையாய்.
பின்னர் என் வாழ்விலே....
வெயிலில், வானில், மரகத வயலில்
மையல் கொண் டென்னை யான் மறந்ததுண்டு.
நள்ளிரவிருளில் நடந்திடும் ஆற்று
வெள்ளம் மெள்ள முனகிடும் இசையைக்
கேட்டுக் கேட்டுக் கரைந்ததும் உண்டு.
வன்ன முகத்திரை விலக்கித் தன் காதலன்
அன்பினை ஏற்கும் புது மணப் பெண்ணென,
தன்னந் தனி வழி வளைவிலே, ஆவணி
அந்திச் செக்கர் என் முன்னே அவிழும்
விந்தையில் என்னை இழந்தது உண்டு. என்னினும்,
என்றோ மல்லிகை வெண் மலர்க் கொள்ளையைச்
சின்னஞ் சிறுவனாய் அள்ளி அணைத்தது
இன்று மென் நினைவிலே இசையும் இனிமையாய்.
சித்தம் களிப்பினில் ஆழ்த்திய நாட்கள்
எத்தனையோ என் வாழ்விலே உண்டு.
திருவிழாக் கூட்டத் தொருவனாய் இரவெலாம்
சிரித்து மகிழ்ந்து யான் திரிந்ததுண்டு.

மழையவிழ் சாம்பல் வண்ண வைகறைப்
பொழுதிலே பாடல் புலம்பியதுண்டு.
அன்பு மென் கரங்கள் தொடுத் தெனக் களித்த
பொன் மலர் வகுள மாலையை மார்பில்
புனைந்தின்பத்தில் பொருந்தியது முண்டு.
என்னினும், மல்லிகை நாண் மலர்க் கொள்ளையை
சின்னஞ் சிறுவனாய் அள்ளி நான் அணைத்தது
இன்னும் என் நெஞ்சினில் நிலவும் இனிமையாய்.

## 37

'மேக நிழலும், காலை வெயிலும் ஓடிப்பிடித்து விளையாடும், இந்த மனோகரமான பொழுதை வீணுக்கலாமா? வீட்டுக்குத் திரும்புவதா, உழைப்பதா, அட சே, யார் செய்கிற காரியம்? வானிலும், மண்ணிலும் பொங்கித் ததும்பும் இந்த அழகைக் கொள்ளை அடிப்போம், பாடிப் பரவிப் பரப்புவோம், வாருங்கள்.'

ஆவணி மேக நிழல்கள் பைம்பொன்
ஆடும் வயலை அளைந்தாடும்;
தாவும் காலை வெயிலோ துள்ளித்
தட்டிப் பிடிக்க விரைந்தோடும்.

தேனை மறந்து வெயிலைப் பருகித்
திரியும் வண்டோ தரு பாடும்;
ஏன் என்று அறியாக் களியில் வாத்தும்
இரைந்து மணலில் நடைபோடும்.

வீடு திரும்பிடலாமோ, அடடா,
வீணுய் இந்த ஒளிப் பொழுதில்
ஓடி உழைக்கப் போமோ, வெயிலில்
ஒன்ருய்த் திரிவோம், சோதரரே!

கொள்ளை அடிப்போம் வெளியை, வானின்
கோலம் கொள்ளச் சாடிடுவோம்;
வெள்ள நுரைபோல் காற்றில் களிப்பு
வீசி மிதக்கும்; ஆடிடுவோம்.

உருவி நிழலும் ஒளியும் குலவி
ஓடும் காலை வேளையினை,
பொருள் இல்லாத பாட்டில் போக்கிப்
போக்கிக் கரைப்போம், சோதரரே!

## 38

‘ நூறு ஆண்டு கழிந்த பிறகு, இன்று நான் பாடும் பாட்டைப் படிக்கும் வாசகனே, நீ யாரோ? என் பாட்டின் பொருள் எது என்று தெரியவேண்டுமா? உன் கதவைத் திறந்து வெளியே பார். அங்கே நீ காணும் இளவேனிலின் அழகில், என் பாட்டின் பொருள் தென்படும் ’ என்கிருர் கவிஞர்.

நூறு வருடம் கழிந்தபின், என்
        நூலில் உள்ள கவிதையெலாம்
ஆறப் பருகும் அன்பா, நீ
        யாரோ அறியேன், இதனைக்கேள்.
தேறி இந்த இளவேனிற்
        செல்வ மலரில் ஒன்றேனும்,
மீறும் எழில் இம் மேகத்தில்
        மின்னும் பொன்னில் துளியேனும்,

என்னல் உனக்குப் பரிசாக
        எடுத்து அனுப்ப வழி இல்லை.
அன்பா, நீயே உன் கதவை
        அகலத் திறந்து வெளியே பார்.
உன்முன் மலரும் பூங்காவில்,
        ஓங்கும் அழகில், என்முன்னே
நின்று மறைந்த பழைய மலர்
        நினைவை முழுதும் திரட்டிடு நீ.

ஒரு நூற்றுண்டின் முன் என்றோ
உதித்த வசந்தத்து ஒரு நாளில்,
பெருகும் அழகில், ஓருள்ளம்
பித்தாய் இசைத்த பெருங்களிப்புக்
குரல்தான் காலம் கடந்து உன்னைக்
கூட வந்தது; அதன் வெறியை
வரையில்லாமல் உன் நெஞ்சில்
வளரும் களிப்பில் உணர்ந்திடு நீ.

‘இங்கேயே, இந்த வடிவக் காட்டிலேயே, வடிவங் கடந்த ஒன்றை நான் கண்டேன். அது என்னைத் தொட்டது. இதுவே இங்கிருந்து போகும் பொழுது என் கடைசி வார்த்தை.’

இங்கே இருந்து போம் வேளை,
இதையே முடிவாய்ச் சொல்கின்றேன்:
இங்கே கண்ட காட்சியினுக்கு
ஈடே இல்லை, இணையில்லை.
பொங்கும் ஒளியாம் விரி கடலில்
பூத்த வைய மலரிதனில்
தங்கும் தேனை முகர்ந்து இன்பம்
தழுவிப் பெற்றேன் பெரு வாழ்வு.

அலகில் வடிவம் அசைந்தாடும்
அரங்கம் இதனில் என் நடமும்
குலவப் பெற்றேன்; வடிவில்லாக்
கொள்கை அவனைக் கண்ணுற்றேன்.
அலகு கண்டு தொட இயலா
அவன்என் மேனி தொடச் சிலிர்த்தேன்.
உலகம் போனால் போகட்டும்,
போம்போது உரைக்கும் வார்த்தை இது.

'ஓயாமல் காட்டைக் கட்டி உழுகிறேம், உழைக்கிறேம். ஆனல், சாலிற் புரளும் புதுமண்ணின் வாசனையும், வெயிலும், மழையும், நிலவும், சுற்றி எங்கும் பெருகும் அழகுக் கொள்ளை யும், எங்கள் கைக்கு வலிமையும், உள்ளத்திற்கு நிறைவும் தரு கின்றன. உழைப்பே இன்பமாகிறது' என்று உழவர்கள் பேசுகிறுர்கள்.

காலை முதல் அந்தி மாலை வரை ஏரைக்
கட்டி உழுவோம், அவ் வேளையிலே,
சாலிற் புரண்ட புதிய மண்ணின் வாசம்
தண்ணெனக் காற்றில் தழைந்து செலும்.

வெய்யில் சுடர்விடும்; வீசி மழையினை
விண்ணிற் புயலும் விரைந்தசையும்;
தொய் இள மூங்கில் வனத்தினிலே இலை
தூங்கித் துடித்துப் பளபளக்கும்.

வேலை செய்யும் எம் கை வீறுகொள்ளும்; களி
விஞ்சி உளமும் நிறைந்து துள்ளும்;
காலை முதல் கங்குல் காணும் வரை இந்தக்
காட்டை உழுவோம் அவ்வேளையிலே.

எல்லையில்லாமல் விரிந்திடும் புல்வெளி
ஏட்டினிலே பச்சைப் பாட்டெழுதி,
நெல்வயல் மார்பில் அலை அலையாய் அவள்
நெஞ்சச் சிலிர்ப்பினை ஓடவைத்து,

யாரோ கவிஞன் இதயமொன்று நடம்
ஆடி இங்கே வண்ணம் பாடி வரும்;
கார் மறுவற்ற முழு நிலவில், மழைக்
கால் வெய்யில் தன்னில் நிலம் களிக்கும்.

வேலை செய்யும் கையும் வீறுகொள்ளும்; களி
விஞ்சி உளமும் நிறைந்து துள்ளும்;
காலை முதல் அந்தி வீழும் வரை ஏரைக்
கட்டி உழுவோம் அவ்வேளையிலே.



T. P.—9

## 41

### ஊர்வசி

ஊர்வசி என்பவள் பாற்கடலிலே தோன்றியவள்; அமரர் நாட்டில் நடனமாடும் அழகி. உலகெங்கும் அங்கங்கே ஒளி வீசும் எழிலின் வடிவமாக, எல்லையற்ற அழகுத் தத்துவத்தின் பிழம்பாக, கவிஞர் தாகுர் அவளைக் காண்கிருர். பெண்வடிவில் உள்ளவள் என்ருலும், பெண்ணுக்குரிய உறவுகள் ஏதும் இல்லாதவள். உலகில் யாரும் அவளை நேரிலே கண்டதில்லை. ஆயினும், அவள் சாயல் அங்கங்கே தென்படும்போது, முனிவரும் கலங்குகின்றனர்; கவிஞன் வெறி கொண்டு அலைகிருன்; உலகெல்லாம் அவள் கடைக் கண் வீச்சில் சிக்கித் தடுமாறுகின்றது. என்று அவள் நேரிலே வருவாள்? என்று மனித உள்ளத்திற்கு அழகின் நிறைவு ஏற்படும்? அவள் இந்த உலகை விட்டு எங்கோ அத்தமனகிரிக்குப் போய்விட்டாள். அதனுல் விளைந்த தாபந்தான், மனித வாழ்வின் இனிமையின் ஊடே துயரச்சரடாக ஓடுகிறது.

தாயல்லை, மகளல்லை, தார மல்லை,
　　தரணியில் நீ எவ்வுறவும் சார்வாய் அல்லை.
மாய எழில் ஊர்வசியே, வானோர் நாட்டில்
　　மலர்கின்ற பெருவாழ்வே, மாலை என்னும்
சாயு மகள், ஓயும் தன் உடலைத் தங்கச்
　　சால்வையினுல் போர்த்தித் தள்ளாடி, பச்சைப்
பாயும் ஒளிப் புல்வெளியில் பரிந்து, கால்கள்
　　பதைத்து ஓசிய நடந்து இருளில் வீழும் போது,

எந்த மனே வாசலும் நீ மிதிப்பாய் அல்லே;
ஏறி உள்ளே விளக்கேற்றி வைப்பாய் அல்லே;
சந்தடி இல்லா நிசியில் தயங்கிப் பாதம்
தடுமாறிப் பின்ன, மையல் முன்னே தள்ள,
சிந்தை துள்ள, விழி தாழ, முறுவல் கொஞ்ச,
சேர ஒரு நாயகனேச் செல்வாய் அல்லே;
விந்தை ஒளி வைகறை போல் கூச்சம் இன்றி
வெளியெங்கும் பெருவியப்பாய் விளங்கும்
செல்வீ !

தாளில்லாத் தாமரையாய்த் தன்னில் தானே
தளிரழகாய் நீ மலர்ந்தது என்ரே? அந்த
நாளில் இருங்கடல் கடைந்த இமையோர் காண
நளிர் அலேயில் எழுந்தனே நீ; நளினக்கையில்
காளவிடக் குடமேந்தி, அமுதும் ஏந்திக்
களித்தனே நீ, பொங்கி எழுந்து ஆடும் பௌவ
நீள் அரவம் மந்திரத்தில் கட்டுண்டாற் போல்
நிமிர்ந்த தலே ஆயிரம் நின் அடியில் வீழ்த்தும்.

இந்திரனும் கண்டுள்ளம் மலேய, தெய்வ
எழில் மேனி நலம் முழுதும் காட்டி நின்ருய்;
குந்தமலர் போல் வெண்மை வடிவு கொண்டாய்;
குறைவொன்றும் இல்லாத நிறைவே, நீயும்
அந்தமிலா ஆதியிலே, அழிவே யில்லா
அழகவிழும் யௌவனமாய் அலர்ந்தாய்; அன்றி,
அந்தமுள சிறுமுகையாய், அறியாப் பெண்ணுய்,
அமைந்ததுவும் எந்நாளும் இலேயோ சொல்லாய்.

உண்டெனில், எந்த இருட் கடலாழத்தில்
உன்பேதைப் பருவத்தைக் கழித்தாய்? எங்கே
கண்டனை உன் விளையாட்டை? மணியும் முத்தும்
கழங்காக ஆடி எங்கே களித்தாய்? யாரைக்
கொண்டனை உன் துணையாக? தரளக் கொள்ளை
குலவும் எந்த ஒளி அறையில், கடல் தாலாட்ட
ஒண்பவளத் தொட்டிலிலே களங்கமில்லா
உன் முகத்தில் முறுவலுடன் உறக்கம் கண்டாய்?

உறங்கியதும் எங்கோ நீ உணரோம். உன்தன்
ஒளிர் மதலை இளம் பருவம் கழிந்தது எங்கோ?
அறிந்திடுவோம் இது வொன்றே: உறக்கம் நீத்து எம்
உலகில் நீ கண்விழித்த கணமே, முற்றும்
நிறைந்தலர்ந்த எழில்மலராய், நவையே இல்லா
நாளிளமை வடித்தெடுத்த அமுதாய் நின்றாய்.
அறிந்த நெடுங் காலமெலாம் உனையே தேடும்
அகிலத்தின் காதலி நீ, அழகும் நீயே.

தாவில்தம் சிந்தையெலாம் தகர்க்கும் உன்தன்
சதிரெழிலே தஞ்சமெனத் தவத்தால் பெற்ற
யாவையும் உன் பொன்னடியில் வைப்பார், வைத்துப்
புகலென்னத் தவங் கிடப்பார் முனிவர் யாரும்;
மூவுலகும் சலிக்கும் உன்தன் கடைக்கண் வீச்சில்;
மூவாத இளமைவெறி மூளும்; காற்றே
தாவி அலைந்து, அந்தகனாய் உன்னைத் தேடித்
தரியாது, உன் நறுமணத்தை எங்கும் தூவும்.

ஆராத மதுமயக்கின் அளியே போல,
அங்கங்கே உனது அழகின் சாயல் கண்டு,
தீராத பெருங்காதற் பசியில் தீய்ந்து,
திரிதந்து, பித்தேறி, தேடித் தேடி,
பாரெங்கும் உனை வாழ்த்திப் பாடிப் பாடி,
பரவசத்தில் ஆழ்கின்றான் கவிஞன்; நீயோ
ஆர் சதங்கை அலம்பப் பொன் ஆடை ஆட
அலை மின்னல் போலெங்கோ அலைகின்றாயால்.

ஆனந்த சாகரத்தில் அமரர் முன்னே
அழகலையே, ஊர்வசி, நீ ஆடும் போது
தானந்த தனத்த வெனத் தாளம் கொட்டித்
தரங்க நடுப் பெருந்திரைகள் தாவியாடும்;
கூனிமுதிர் நெற்கதிரின் உச்சி மேலே
குதித்தனுங்கும் நிலமகளின் பச்சைச் சேலை;
வான் வெளியில் உன் காறை தெறித்த வைரம்
வண்ண ஒளித் தாரகையாய்த் துள்ளி வீழும்.

தன்னையே ஒரு நொடியில் மறந்து நிற்கும்
தாபத்தில் துடிக்கின்ற மனித உள்ளம்;
மின்னலெனச் சிவ்வென்று நரம்பில் எங்கும்
மீறி எழும் உயிர் விறலாய்க் குருதி பொங்கும்;
தன்னிச்சைப் போக்கினிலே வரம்பே இன்றித்
தழைக்கின்ற சுதந்திரத்தின் வெறியே, உன்தன்
பொன் திணிந்த மேகலை, உன் நடன மாயப்
புயலெறியத் தொடுவானில் பிதிர்ந்து சிந்தும்.

உதயகிரி மேல் அரும்பும் வடிவே! வாழ்வே!
ஊர்வசியே, உலகத்தை மயக்கும் கள்ளே!
நிதமும் அண்டம் பொழிகின்ற கண்ணீர் வெள்ளம்
நீராட்டும் மெல்லிய பூங்கொடியே! உன்தன்
பதமலரில் செம்பஞ்சுக் குழம்பு வண்ணம்
படிந்த பரிசு அறிவாயோ? படரிற் பட்டுச்
சிதறுகின்ற மூவுலகின் இதயம் சிந்தும்
செங்குருதி யன்ருே உன் பதத்தின் செம்மை?

காரனைய உன் கூந்தல் சுரிதகத்தின்
கட்டுக்குள் நில்லாமல் மருங்கிலாட,
பாரெல்லாம் மலர்கின்ற ஆசை சேர்ந்து ஓர்
பங்கயமாய் விரிய, அந்த மலர்ப் பீடத்தில்
ஆரவிரும் உன்பாத நளினம் கொஞ்ச
ஆடுகின்ருய், ஆடுகின்ருய்; ஆனுல் உன்னை
நேராகக் கண்டவர் யார்? நெஞ்சாம் வானில்
நிழலாகக் கனவாக ஒளியும் கள்ளீ!

உன்னை எண்ணி ஏமாறி உள்ளம் நைந்து இங்கு
உருகுவோர் புலப்பமெலாம் உணர்ந்திடாயோ?
கன்னெஞ்சோ உன்நெஞ்சு? செவிடோ காது?
காலத்தின் முதன்மூச்சாய் முகிழ்த்த அந்தப்
பொன் உதயம் வாராதோ இனிமேல் மண்ணில்?
பொதிர் கடலின் கரைஅறியா ஆழம் ஏறி,
மின்னுகின்ற நீர்படிந்த கூந்தலோடு
மீளவும் நீ-இவ்வுலகில் வரமாட்டாயோ?

வந்தால் அம் முதல் உதய ஒளியாய், உன்தன்
வடிவழகே முன்னியெழும் வையம் காண;
விந்தை உன்தன் உடல் விம்மிக் கரைவதே போல்
விரிபுனல் உன் அங்க மெலாம் விம்மி வீழும்.
முந்துதிரைப் பெருங்கடலும் வானந்தொட்டு,
முட்டும்தன் இடிக்குரலை மூட்டி, பண்ஆர்
சந்தங்கள், இதுவரையில் கேட்டி ராத
தாளங்கள் கொட்டி எழுந்து ஆடும், சாடும்.

இல்லை, இல்லை, வரமாட்டாள், வரவேமாட்டாள்.
என்றே அவ்வெழில் நிலவும் அவிந்தது
அய்யோ!
தொல் அத்தமன கிரியே வீடாய்க் கொண்டு
துஞ்சிவிட்டாள், இனிவாராள். அதனல்,
மண்ணில்,
சில்லென்ற இளவேனில் நறுமென் தென்றல்
சிரித்துலவும் போதும் அந்தச் சிரிப்பின் உள்ளே
எல்லையிலா எழில் மகளை என்றே என்றும்
இழந்த துயர்க் குரல் உருவி இழையாய் ஓடும்.

வண்ண முழு மதிஇரவில், நிலவில் மூழ்கி
வையமெலாம் களிதுளும்பிச் சிலிர்க்கும்
போதும்
எண்ணம் எங்கோ நெடுந்தொலைவு செல்லும்; ஏங்கி
ஏதோ சஞ்சலம் இசைக்கும்; இதயம் சோரும்;

கண் கலங்கும்; என்றாலும், கட்டொன்றில்லாக்
கவினே! எம் உயிர் அழுங்கும் துயரிலன்றோ
நண்ணும்இங்கு பொன்னுலகம், உய்வோம், என்ற
நம்பிக்கை தலைதூக்கி நிமிரும், வாழும்?

## 42

‘தீயே, உன்னைப் பாடுகிறேன். நீ திறல் மிக்கவன், கட்டெல்லாம் சாம்பராகும்படி எரிப்பவன். ஒரு நாள்—அது என்றோ—உன் அணைப்பிலே இந்த ஊன்வெறியும் தீமையும் நீறாகி அழிந்துவிடும்.’

தீயே, என்தன் சோதரா, உன்
திறலைப் பாடுகிறேன்.
மாயைக் கட்டை எரிக்கும் உனது
மகிமை பாடுகிறேன்.

செக்கச் சிவந்தவனே—அழுக்கைச்
சீறிடும் வானவனே!
மிக்க வடிவினிலே—வடிவை
மீறித் தழைப்பவனே!

கன்னற் பாடல் எதனைப் பருகிக்
களித்து, வெறியினிலே
மின்னற் கையை நீட்டி வானை
மேவத் துழவுகிறாய்?

உன்தன் களி நடனம்—தனிலே
உள்ள உறுதி எது?
சொல் நலம் மீறும் அதன்—சொகுசைச்
சொல்ல வழியும் எது?

வாழ்க்கைச் சிறையில் இருந்த நாட்கள்
வற்றி உலைந்தவுடன்,
தாழ்ப்பாள் வாசற் கதவிலிருந்து
தானே வீழ்ந்தவுடன்,

கையெனும் கட்டினையும்—இந்தக்
காலெனும் கட்டினையும்
ஐய, பிடி சாம்பர்—ஆக
அழித் தெரிந்திடுவாய்.

அன்றென் உடலும் உனக்குள் சிக்கி
அணைத்து முயங்கிடுமே.
நின்றுன் சிவப்பு நிமிரும் நடத்தில்
நீருய்ச் சுழன்றிடுமே.

ஊழி உன் வெம்மையிலே—வெய்ய
ஊன்வெறி ஆறுமடா!
ஆழ்ந்திடும் தீமையெலாம்—ஐயா,
அனற் சகோதரனே!

## 43

'இந்த உலகத்தோடு உள்ள தொடர்பு, எனக்குத் தாயின் அன்பைப் போல் உதவுகிறது. இங்கே எங்கும் அன்பையே காண்கிறேன், ஆண்டவனுடைய கருணையையே உணர் கிறேன்.'

ஊமையது இம் மண்ணும் என்னை உற்று நோக்கும்;
உறவுக்கை நீட்டி எனை அணைக்கும்; கங்குல்
தூமவெளித் தாரகையோ விரலால் என்தன்
சுடர்க்கனவு தொடும்; என்தன் பழைய பேரைத்
தாம் முழுதும் அறியும்; மற்று என்னை என்றே
தாலாட்டித் தணிந்த இசை தமக்குள் பேசும்;
ஏமஒளி முதல் உதயந் தனில் யான் கண்ட
எழில் முறுவல் முகத்தை இன்று நினைவிற் கூட்டும்.

மண்ணிதனில் உள்ள ஒவ்வோர் துளியின் உள்ளும்,
மாருத பேரன்பு மலரும்; ஆன்ற
விண்ணடைவின் விரிந்த நெடு வீச்சில் எங்கும்
வீயாப் பேரானந்தம் விளங்கும்; வெற்று
மண்ணுடனே மண்ணாகப் போவேன் என்ன
மனங்கலங்கி விழமாட்டேன்; இங்கே இந்த
மண்தனிலே அவன் பாத மலர்கள் தோயும்
மாமாயம் யானறிவேன், மயங்க மாட்டேன்.

மலராகப் போவேனே, போனால் என்ன?
மலரதனை அவன் கரத்தில் ஏற்பான்; இங்கே
அலையாடும் கடல் மீதும், கரையின் மீதும்,
அனைத்துயிரை ஏந்துகின்ற ஓடத்தேயும்,
நிலையாக அவன் உள்ளான்; யான் இங்கு ஏதாய்
நின்றாலும் என்ன, அவன் அருளிங்குண்டு;
குலவியெனைக் கொஞ்சும் இந்தப் புழுதிச் செல்வக்
குவலயத்திற்கு அவன் கருணைச் செல்வம்
உண்டு.

## 44

சாவு, துயரம், இவற்றின் மூலமாகத்தானே, சத்தியத்தின் நெஞ்சில் அமைதி நிலவுகிறது ? வளர்ந்து, தேய்ந்து, ஓயாமல் பெருகும் உயிர் வெள்ளத்தில், அவனுடைய திருவடி பதிகிறது. அதைக்கண்டு நிலைபெறும் ஆசையில், என் நெஞ்சு நிமிர்கிறது.

சாவின் வழியே, துயர் வழியே,
சத்தியத்தின் இதயத்தில்
மேவும் அமைதி; உயிர் வெள்ளம்
முடிவில்லாமற் பெருகி வரும்.
தாவில் வெயிலும், தாரகையும்,
தாங்கும் வாழ்வின் மலர் நகையை;
பூவர் வசந்தம் உயிர்க் குலத்தின்
புதுமைப் பாடல் ஏந்தி வரும்.

அலைகள் எழுந்து விம்மும், பின்
அடங்கிச் சரியும், சிதறி விழும்;
மலர்கள் விரியும் மணம் வீசும்,
மடியும், வதங்கிச் சருகாகும்;
உலைவில்லாமல் எங்கெங்கும்
ஓங்கும் ஒன்றன் பாதத்தில்
நிலைபெற் றுய்யும் ஆசையில், என்
நெஞ்சு நிறைந்து நிமிர்ந்து செலும்.

## 45

துயரம், அச்சம், வெற்றி, தோல்வி, இவற்ருல் ஆனதே வாழ்க்கை.

திரும்பத் திரும்ப, துயரமென்னும் இருண்ட இரவு
வருகிறது, என்வாசற்படிக்கு வருகிறது.
கூனிக்குறுகிய வேதனை என்னும் பொய்யே
அதன் படைக்கலம்.
பயமே அதன் முன்னேடி.
கோர அபிநயம் பிடித்துக் கூத்தாடும் பயமே,
துயரின் இருள் நாட்டிய ஏமாற்றின் அலாரிப்பு.

துயரின் பயங்கர முகமூடியை
எப்பொழுதெல்லாம் உண்மையென நம்புகிறேனே
அப்பொழுதெல்லாம் என் முயற்சி
விழலுக்கு இறைத்த நீர் ஆகிறது.
எனக்குப் படுதோல்வி.

வெற்றியும் தோல்வியும் ஆன இந்த விளையாட்டு,
வாழ்வின் கண்கட்டுவித்தை, அதன் மாயை.
பிறந்தது முதல்,
ஒவ்வொரு அடியெடுத்து வைக்கும் போதும்,
வெற்றி தோல்வி என்ற இந்தப் பேய்,
என்னை விடாமல் துரத்தி வருகிறது.
வாழ்க்கையா?

அது, விதவிதமான அச்சத்தால் அமைந்து
அசைகின்ற துயர நெடுந்திரை;
சிதறும் இருளைக் கொண்டு
சாவின்கை சமைக்கும் நகாசு.*

* இந்தக் கவிதையைத் தாகுர் வங்காளி மொழியில் வசனத்திலேயே எழுதியுள்ளார்.

## 46

'இந்த உலகில் பிறந்தேன்; இங்கே ஓடும் படைப்பின் தளராத இசை என் நரம்பிலும் ஓடுகிறது. இந்த வியப்பைக் காண்கிறேன்; கவிதை பிறக்கிறது.'

ஒளியும் உயிரும் ஒன்றுமிந்த
உலகந் தனிலோர் இடம் பெற்றேன்;
உளமோ இந்த வியப்பினிலே
ஓங்கும், களிக்கும், இசைபாடும்.
விளியாக் கால நெடுங்கதியின்
விசையில் ஆடி உருவாகும்
தளராப் படைப்பின் தாளம் என்தன்
தணியா நரம்பின் துடிப்பாகும்.

காட்டில் நடப்பேன், பசும்புல்லின்
கனிவைத் தொடுவேன், விந்தையதாய்ப்
பாட்டை அருகில் கொஞ்சு மலர்
பார்த்துச் சிலிர்த்து மகிழ்ந்திடுவேன்.
ஓட்டைப் புழுதி தனக்கும் எழில்
உலவாது அளிக்கும் அகண்டமிதோ
காட்டும் காட்சி வியப்பினிலே,
கண்ணை விழிக்கும் என் கவிதை.

கண்டேன், கேட்டேன், வாழ்வுற்றேன்;
கணக்கில் அறிவின் ஆழத்தில்,
கண்ட எல்லாம் கடந்து உறையும்
காணு மாயப் பேருண்மை

உண்டென்று உணர்ந்தேன், எனதுள்ளம்
ஓங்கி நிறைந்து பெருகும் ஒரு
விண்டுரைக்க மாட்டாத
வியப்பில் அழுந்திப் பாடுகிறேன்.

## 47

'உன் உள்ளே, இருட்டிலே ஒளியை எண்ணி யாரோ துடிக்கிருனே, யார் அவன்? காலைப்பொழுது வந்த பின்னும் உள்ளேயே புழுங்குகிருனே ! ஏன் உன் வீடும், வானும் இப்படிப் பிரிந்து வருந்துகின்றன?'

ஒளியைப் பருகத் துடித்தே—உன்தன்
உள்ளே இருட்டில் தவிப்பவன் யாரோ?
வெளியில் அலைந்திடும் காற்றில்—உயிர்
விந்தை உயிர்ப்பு விரைந்திடுமேனும்,
ஒளியினை எங்கும் உதிர்த்தே—வானில்
ஓங்கிய காலை விளங்கிடுமேனும்,
வெளியை அவன் காணவில்லை—அவன்
வீணையின் தந்தியும் பேசிடவில்லை.

கானில் புதுமை அலர்ந்த—செய்தி
காவினில் எங்கும் பறவைகள் பாடும்;
தேனவிழ் பூக்கள் நிறத்தில்—உயிர்த்
தேன்களி பீறியே பொங்கிடும்; கங்குல்
போனபின்னும் அறைக்குள்ளே—புகை
போர்த்து விளக்கும் புழுங்குவதேனே?
வானும் உன் வீடும் இங்கய்யோ—இந்த
வாகில் பிரிந்து வருந்துவதேனே?

## 48

மண்ணுலக வாழ்க்கையில் உள்ள அன்பு, நம்பிக்கை, முதலிய உணர்ச்சிகளை, பந்தம் என்று குறை கூறுவது? இந்த வாழ்க்கையில் நமக்குள்ள பிடிப்பை, அழிவுத்தாகம் என்று ஒதுக்குவது? தாயின் மார்பிலே புகல்தேடும் சேயின் உயிர்த் தாகம் போன்றது இது. இந்தத் தாகமே, உலகுக்கெல்லாம் தாயான அருளை நோக்கி நம்மை அழைத்துச் செல்கிறது. அந்த அருளின் அரவணைப்பை—அது, இங்கே இந்த மண்ணிலும் உள்ளது—பந்தம் என்று உதறித் தள்ளுவார்களா?

பந்தம்; ஆமாம், பந்தம் என்றே
 பழிக்கத் தோன்றும்; உள்ளத்தில்
விந்தையாக மலரும் அன்பும்,
 வீயா நம்பிக்கை உணர்வும்,
பந்தம் என்றே தோன்றும்; ஆனல்
 பரிந்து மகவை மார்போடு
சிந்தை துள்ள அணைக்குந் தாயின்
 செல்வக் கரமே பந்தமிவை,

தாகம் என்று சொல்வாய்? ஆமாம்,
 தாகம் இதுவும் செய்வது கேள்.
ஏகமாக என்றும் உள்ள
 எந்தம் தாயின் மார்புக்கே
போகும் படிக்கு வாழ்வைத் திருப்பி,
 பொன்றுக் களிப்பின் ஊற்றிற்கு
வேகமாக அழைத்துச் செல்லும்
 விஞ்சைத் தாகம், உயிர்த் தாகம்.

தாயின் மார்பில் தங்கும் மகவைத்
தட்டிப் பிரிக்க யார் முனைவார்?
சேயின் வாழ்வு வளரத் துடிக்கும்
செம்மைத்தாகம் யார் கடிவார்?
சேயை அணைத்து வளர்த்துக் காக்கும்
திருவின் வடிவாய்த் திகழ்கின்ற
தாயின் கரத்தைப் பந்தம் என்றே
தள்ளி அதனை யார் களைவார்?

## 49

உலகத்தின் பொருள் என்ன? இக்கேள்விக்கு பதில் எது?

ஆதி முதலில், காணும் உலகாய்,
காணு உண்மை முகிழ்த்த அந்த முதல் நாளில்
கதிரவன் கேட்டான்:
'நீ யார்?'
ஏதும் பதில் இல்லை.

ஒவ்வொரு யுகமாய்க் கழிந்தது காலம்.
மேற்குக் கரையின் மோனத்தில்
கடைசி நாட் கதிரவன் கேட்டான்,
கடைசியாய்க் கேட்டான்:
'நீ யார்?'
ஏதும் பதில் இல்லை.

## 50

'இந்த உலகம் என்ற கடலுக்குள்ளே, சத்தியம் என்ற முத்து உள்ளதாம். அதைத் தேடிச் செல்லும் ஞானியரோடு போக எனக்கு மனமில்லை. உலகக் கடலின் முகத்தில் மின்னும் அழகும் அசைவுமே எனக்குப் போதும். இவற்றில் எப்போதாவது எனக்குச் சலிப்பு ஏற்பட்டால் பார்த்துக்கொள்வோம். அப்போது வேண்டுமானால், கடலுக்குள் விழுந்து, அங்கே உள்ளதைக் காண்பேன். என்ன காண்பேனோ, சாவா, பெருவாழ்வா?'

வடிவக் கடலே, உன்தன் உள்ளே
வளரும் இருளின் ஆழத்தில்,
முடிவில்லாத திரளாய்க் கொள்ளை
முத்தும் மணியும் சுடர்விடுமாம்.
கடலில் மூழ்கி முத்தை எடுக்கும்
கலையில் வல்லோர், மணிக்குவையை
அடையத்தேடி அலைவார்; எனக்கோ
அவரோடு அலைய மனமில்லை.

கடலே, உன்தன் முகத்தில் மின்னும்
கவினும், ஒளியும், உன்மார்பின்
முடியா மாய அசைவும், அலையில்
மூளும் வெறியும், வெண்நுரையின்
நடமும் எனக்குப் போதும்; இவற்றில்
நான் என்றேனும் சலிப்புற்றால்,
கடலே, உன்னுள் வீழ்வேன், அங்கே
காண்பேன் சாவோ, பெருவாழ்வோ.

## 51

‘ என் வாழ்க்கை ஒரு முட்புதர். ஆனால் அதுவும் ஒரு நாள் மலரும்; எழில் மகுடம் சூடும். அப்போது பேரின்ப வெள்ளத்தில் ஆழும்.’

என்றேனும் எனது முட் புதருக்கும் ஒரு மலர்
எழில் மகுடம் சூட்டி மகிழும்.
என்றேனும் என் துயரும் வெய்யில் முன், சிவந்த தன்
இதய இதழ் அவிழ்ந்து விரியும்.
என்றேனும் இதுவரையில் காத்து இரவு பகலாக
ஏங்கும் இவ் வானம் நிறையத்
தென்றலும் சிவ்வென் றுலாவி வரும், என்னுளம்
சிலிர்த்துக் களித்து நிமிரும்.

ஒரு கணப் போதிலே மலர்ந்திடும் எனதன்பும்,
ஒருவனருள் பெறப் பழுக்கும்.
அருவியே எனைத் தின்னும் வெட்கமும் அகன்றிடும்;
ஆழ் இருள் இரவும் அழியும்.
உரிமையாய் என்னை அவன் பற்றிடும் உதயத்தின்
ஒளியில் என் அன்பவிழ்ந்து,
பெருமையாய்த் தன் கடைசி இதழையும் வீசிடும்,
பேரின்ப வெள்ளம் ஆழும்.

## 52

'சோம்பித் திரிந்து நேரம் போக்கிவிட்டேன். ஆற்றைக் கடக்கவேண்டும். சுற்றிலும் வெறுமை. ஆனால் அக்கரையின் குரல், காற்றைக் கள்வெறி கொள்ளச் செய்கிறது.'

கடலில் படகு செலுத்திட வேண்டும்;
    ஆனால் கரையில் வீணாக
அடடா, சோம்பிக் கழியுது பொழுதும்;
    ஐயோ, விதியே, என் செய்வேன்?

வந்த கடமை முடித்தாள், மலர்ந்து
    வசந்த மகளும் விடை கொண்டாள்;
சிந்தி வதங்கிய மலரைச் சுமந்து
    திகைத்து நிற்பேன் வெறுமையிலே.

ஓல மிட்டே கூவி அலைகள்
    உரக்கப் பேசி அதிர்ந்தன காண்;
சாலை மேட்டு நிழலில் மஞ்சட்
    சருகு துடித்து விழுந்தன காண்.

ஏனோ, மனமே, சூனியம் காண்பாய்?
    எங்கே இருந்தோ அக்கரையின்
கானம் தவழ்ந்து காற்றின் உளத்தில்
    கள்வெறி ஊட்டும், காணாயோ?

## 53

'அந்தி வேளை; ஆற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வரப் போகிறேன். எங்கிருந்தோ குழலோசை வருகிறது. வீடு திரும்ப இயலுமோ ?'

மாயும் பகலும் மறைந்தது—இந்த
மண்ணில் இருளும் விழுந்தது.
போய் என் குடத்தை நிறைத்திட—வாய்த்த
பொழுது விரைவில் புகுந்தது.

ஆற்று வெள்ளத்தின் துயரமும்—இசை
ஆக வெளியில் தழைத்தது;
காற்றில் மிதந்து துடித்தது—என்னைக்
'கங்குலில் வா' என்றழைத்தது.

போவார் வருவார் இல்லாமலே—துறைக்குப்
போகும் வழியும் வெறித்தது.
கூவியே காற்றும் குதித்தது—அலைக்
கொள்ளை நதியிற் கதித்தது.

சென்ற வழியே திரும்பி என்—வீடு
சேரவும் கூடுமோ ஓர்கிலேன்.
சென்றுல் என்பாதை முடிவிலே—யாரைச்
சேரவும் நேருமோ தேர்கிலேன்.

முன்பின் அறியாத யாவனே—புனல்
மூட்டத் துறைத் தோணி மீதிலே,
தென்ன வெனக் குழல் ஊதுவான்—அந்தத்
தேனிசை வீழும் என் காதிலே.

## 54

'சாவு வந்து கதவைத் தட்டுவான். வெறுங்கையோடு திரும்பிப் போகச் சொல்வேனு? மாட்டேன். என் வாழ்வில், அழகுணர்ச்சியால் நான் திரட்டிய மதுவை அவனுக்கு அளிப்பேன்.'

சாவு வந்தே உன் கதவைத்
தட்டி நிற்கும் வேளையிலே,
மேவி எந்தப் பொருளை நீ
விருந்தாய் அவன்முன் வைப்பாயோ?
தாவில் என்தன் வாழ்க்கை எனும்
தணியா நிறைவை வைத்திடுவேன்.
சாவை வெறுங்கை யுடனே நான்
தவித்துத் திரும்ப விடமாட்டேன்.

கோடை இரவில், கார்காலக்
கோலப் பகலில், ஓயாமல்
தேடித் தேடி நான் சேர்த்த
தெவிட்டா மதுவை, என் வாழ்வில்
ஓடி உழைத்து நான் பெற்ற
ஊதியத்தை, சாவின்முன்
தேடி வந்து என் கதவை அவன்
தட்டும் போது வைத்திடுவேன்.

## 55

'சாவே என்தன் வாழ்வின் நிறைவு. அவன் என்னைத் தன் ஏகபோகமாகக் கொள்ளட்டும். அப்போதாவது இந்த மணப் பெண் தலைவன் வீட்டிற்குப் புறப்பட மாட்டாளா? அவனை ஏகாந்தத்தில் சந்திக்க மாட்டாளா?'

சாவே, என்தன் வாழ்வின் நிறைவே,
சாவே, எனது சாவே, வா,
ஆவி குளிர என்தன் காதில்
அந்தரங்கம் பேசிட வா.
மேவி உன்னைக் காண வன்றோ
விழித்திருந்தேன் காலமெலாம்?
சாவே, இன்ப துன்பம் அனைத்தும்
சகித்தேன், உன்னைப் பெறவன்றோ?

என்தன் உடைமை, என்தன் ஆசை,
என்தன் காதல், நான் முழுதும்,
அந்தரங்க கதியில் உன்னை
அணையப் பெருகும் ஆறே காண்.
உன்தன் கடைக்கண் பார்வை என்மேல்
உற்ற தென்னில் என்றென்றும்
என்தன் வாழ்க்கை முழுதும் உனக்கே
ஏக போகம் ஆகாதோ?

வருவான் மணாளன் என்றே எண்ணி,
வண்ண நறுமலர் மாலை யெலாம்
கருதிக் கருதித் தொடுத்து வைத்தோம்;
காத்திருப்போம்; மணப்பெண்ணும்
பெருமையுடனே வீட்டை விட்டுப்
போவாள் எங்கோ, எங்கேயோ
இரவில் தனது தலைவன் தன்னை
ஏகாந்தத்தில் சந்திப்பாள்.

## 56

'இந்த உலகத்தை நான் இழக்கும் காலம் வரும். வந்தால் என்ன? உலகம் முன்போலவேதான் செல்லும். என்னுடைய வாழ்நாளுக்கு முடிவுண்டு என்பதை எண்ணும்போது, காலம் என்ற வரம்பு சிதறுகிறது. அப்போதுதான், சாவு என்ற ஒளியிலேதான், தாழ்ந்தவை என்று நான் ஏசி ஒதுக்கிய பொருளின் பெருமை தெரிகிறது; உன் உலகின் உண்மை புலப்படுகிறது.'

இந்த உலகக் காட்சியை நான்
இழக்கும் காலம் வரும் என்று
நன்ருய் அறிவேன். ஆம், அந்த
நாளில், இருண்ட நீண்ட திரை
என்றன் கண்ணை மறைத்து விடும்;
இமைகள் மூடும் முடிவாக.
இந்த வாழ்வும் மோனத்தில்
என்னை விட்டே அகன்றுவிழும்.

ஆனல் என்ன? என்றும் போல்
அணையும் இரவு; தாரகைகள்
வானிற் காவல் புரிந்தொளிரும்;
வழக்கம் போலக் காலைவரும்;
போன படியே கடல் அலைபோல்
பொங்கி விம்மும் நாழிகைகள்
ஆறு இன்ப துன்பத்தை
அள்ளி வீசி எறிந்து செலும்.

என்றன் முடிவை எண்ணுகிறேன்;
எண்ணும்போது இங்கு இதுவரையில்
நின்று எனக்கு நெடுந்தடையாய்
நிமிர்ந்த காலம் சிதறிவிடும்.
இன்று வரை உன் உலகில் நான்
எண்ணுது இருந்த நிதிவெள்ளம்
நன்ருய் எனக்குச் சாவென்னும்
நலியா ஒளியில் விளங்கிவிடும்.

நீச நிலேயாய்த் தோன்றியது உன்
நிகரில் மேன்மை நிறைவாகும்;
ஏச இலக்காய் இழிந்த உயிர்
இணேயில் பெருமைக் கலமாகும்.
ஆசைப் பட்டே நான் அடைந்த
அனேத்தும் அகல்க! அற்பம் என
வீசி நான் இங்கு எறிந்தவையே
வேண்டும் பொருளாய் அமைந்திடுக!

## 57

'வாழ்வை நான் விரும்புகிறேன். அதன்மேல் எனக்கு அளவிலா ஆசை. அது காரணமாகவே, சாவையும் நான் வரவேற்பேன்.'

இந்தப் பிறவி வாசலை நான்
எப்படிக் கடந்தேன் முதலில் எனும்
அந்த மருமம் தனை உணரும்
அறிவு அக் கணத்தில் எனக்கில்லை.

அந்தகாரம் சூழ் நிசியில்
அலரும் காட்டுச் சிறு முகைபோல்
வந்தேன், எனை இம் மாயத்தில்
மலரச் செய்த திறலெதுவோ ?

காலை வான ஒளி கண்டேன்
கண்ட வுடனே உணர்வுற்றேன்.
ஞாலம் இதுவும் என் சொந்த
நாடே என்று தெளிந்திட்டேன்.

காலம், வடிவம், பெயர் கடந்து
கருத்துக் கெட்டாது உள்ள பொருள்
மேலாம் என்தாய் வடிவில், எனை
மேவி அணைத்த அருள் கண்டேன்.

இந்தப் பொருளே, அறிவிகந்த
இதுவே, என்தன் சாவினிலும்
வந்து என் முன்னே நான் அறிந்த
வடிவம் தாங்கி எனைத் தாங்கும்.

இந்த வாழ்வில் எனக்கு ஆசை
        இருப்ப துண்மை; அது கொண்டே
முந்தும் சாவை முகமனுடன்
        முன் சென்று ஏற்பேன் என்றுணர்வேன்.

மார்பி லிருந்து பரிவுடன் தாய்
        மாற்றும் போது மதலை அழும்.
நேராய்க் கணத்தில், மறுமுலையில்
        நிறைவு காணும், நெஞ்சாறும்.

## 58

‘இங்கே வாழ்வென்னும் கடலில், வடிவம் அற்ற பூரணம் என்ற முத்தையே தேடுகின்றேன். இங்கே இல்லையா அது? அப்படியானால், என் உயிரை அங்கே எடுத்துச் சென்று அகண்ட நாதத்தோடு சுதி சேர்ப்பேன்.’

வடிவம் அற்ற பூரணமாம்
        வண்ண முத்தைப் பெற எண்ணி,
முடியா வடிவம் அலையலையாய்
        மோதும் கடலில் மூழ்கிடுவேன்.
அடிபட்டு உலைந்த இப்படகில்
        ஆடி ஆடி அலைந் தலைந்து,
கடலின் மேலே துறை துறையாய்க்
        காணப் போவது கைவிட்டேன்.

அலைகள் எறியும் விளையாட்டில்
        ஆழ்ந்த நாட்கள் அகன்றன காண்.
உலையாப் பொருளில் எனை ஒடுக்கி
        உலைவது ஒன்றே விழைகின்றேன்.
நிலையும் நீச்சும் காணாத
        நீண்ட பள்ளத்து அருகெங்கோ
நிலவும் அகண்ட ஓலக்கம்
        நேர்வது ஒன்றே நேர்கின்றேன்.

என்தன் வாழ்வாம் யாழை அங்கே
　　எடுத்துச் செல்வேன்; என்றென்றும்
முந்தும் அகண்டப் பெருமோன
　　முதலோடதனைச் சுதி சேர்ப்பேன்.
என்தன் யாழும் கடைசிச் சொல்
　　எழுப்பி விம்மி அடங்கிய பின்,
அந்த மில்லா மோனத்தின்
　　அடியில் ஒடுங்க வைத்திடுவேன்.

59

‘ உண்மையைக் காணச் செல்லும் பாதை, நீண்டு, நீண்டு, எங்கெங்கோ சென்று, பிறகு என்னிடமே வருகிறது. நானே உண்மை.’

எத்தனை நீளம் இந்த வழி,
எத்தனை நேரம் என் பயணம்!
புத்தம் புதிய முதல் ஒளியாம்
புலரித் தேரில் ஏறி, வெளி
சுற்றிச் சுற்றி வான்மீனில்
சுவடு பதித்துக் காலமெலாம்
எத்தனை எத்தனை பாழ் உலகில்
என்தன் தொலையா வழி சென்றேன்!

உன்னும் வழிகள் ஆயிரத்தில்,
ஓயாத் தொலைவில் நீள்வதுதான்
உன்னை உன்பால் அழைத்துவரும்
உண்மை வழியாம், ஒரு வழியாம்.
பின்னிச் சிக்கல் நிறைந்து, உன்னைப்
பெரிதும் வருத்தும் சாதனையே
கன்னற் பாடல் எளிமையினைக்
காணும் வழியாம், கலை வழியாம்.

வீடு வீடாய்ச் சென்று அங்கே
வெறுமை கண்ட பிறகு அன்றோ
நாடும் தனது வீட்டு எல்லை
நண்ணி வருவான் வழிப்போக்கன்?

கோடி உலக வெளிச் சுற்றில்
கோடி அலைந்த பிறகு அன்றோ
தேடும் மூலத் தானத்தைத்
தேறி அடைவான் தேடுபவன்?

கண்ணால் துழவித் துழவி வெளி,
காணாது ஒன்றும் அலமந்தேன்.
கண்ணை மூடி உனை இங்கே
கண்டேன் என்றேன். எங்கு என்றே
விண்ணும் மண்ணும் திசை அனைத்தும்
விரியும் கண்ணீர்ப் பெருவெள்ளம்,
உண்மை நானே, உளது அதுவே,
உறுதி இது என்று ஓங்கியது.

கௌதம முனிவன் சாபத்தால், அவனுடைய மனைவி அகலிகை கல்லாய்ப் போனாள். இது இராமாயணத்தில் உள்ள பழைய கதை.

கல்லாய் நின்ற அகலிகையைச் சுற்றி, காட்டிலே உள்ள புல், பூண்டு, பறவை, பூச்சி, இவற்றால் ஆன உயிர்க் கடல் புரளுகிறது. இந்தக் கடல் அலைகளால் வருடப் பெற்று, கல் வடிவான அகலிகை மெல்ல மெல்ல உணர்ச்சி பெறுகிறாள். முனிவனுடைய சாபம் என்ற அந்த நீண்ட இரவு, அவளைப் புனிதப்படுத்துகிறது. இரவு கழியுமா என்று ஏங்குகிறாள்; இராமனுடைய திருவடி, தனக்கு உயிரளிக்க, தன்னை நோக்கி நடந்து வருகிறதா என்று காட்டின் மோனத்தைத் தன் செவியால் துழாவுகிறாள். சாபவிமோசனம் ஆனதும், நீண்ட துயரின் சாயல் கண்ணிலே பனிக்க, புதிய இளமையோடும், வனப்போடும் நிற்கிறாள். இதைச் சொல்கிறது இந்தப் பாடல்.

## அகலிகை

ஆசை வெறி அழல் அலையாய்க் குமுறி, விம்மி
அதிர்ந்த உளக்கடற்சுழலில் நின்றாய்; சாபம்
வீசியுனைத் தாக்க அந்தக் கணமே கல்லாய்
வெறி குளிர்ந்தாய், அசைவற்றாய், வினையும் அற்றாய்.
தூசி இது கங்கையென மூழ்கி, மண்ணின்
தொல்லமைதி வெள்ளத்தில் தோய்ந்து நின்றாய்.
தேசுவிதை நிறைந்து மலர் உதிர்வதே போல்
தேய்ந்து பகல் பல வாடி வதங்கி, வீழ்ந்து,

காலைப் பொன் புதுத்தளிராய் முகிழ்க்கும் ஊமைக்
 ககனவெளி நெடுமையின்கீழ், படுத்தாய்; தாயின்
பாலை நினைந்து அவளாகம் வருடிக் கொஞ்சும்
 பச்சை இளம் சிறுமதலை விரலைப் போல,
ஞாலத்தின் மண்மார்பைத் துழவும் புல்லின்,
 நளிர்மரத்தின் வேரோடும் ஒன்றி நின்று,
நீல நெடு வெயில் தந்த முத்தம் கொண்டாய்;
 நெஞ்சினிலே நிறைந்தோடும் சிலிர்ப்பைக் கண்டாய்.

புழுதியிலே பிறந்த உயிர் யாவும், மீளப்
 புழுதியிலே துயில் இரவில், அவற்றின் மூச்சாய்
தழையுமிசை உன் மேலே படியும்; சாந்தி
 தவழ் தரையின் தாய்மை உன்தன் உளத்தில் ஊறும்;
கொழுங் கொடிகள் உனை மருவித் தழைக்கும்; காதற்
 கொள்ளை மலர்க் கரத்தால் உன்மேனி சுற்றும்;
தழை அசைவும், தாவுதத்துக் கிளியின் கூத்தும்,
 தண்ணிதழ்மேல் தத்தளிக்கும் வண்டின் வீச்சும்,

விட்டில்தன் சிறைத் துடிப்பும், திரையாய் விம்மி
 விரையும் உயிர்க் கடல்வெள்ளம் உன்னைச் சூழ்ந்து,
தொட்டு உன்தன் அடிவருடிச் சலிக்கும்; நீயோ
 தொலையாத காலமெலாம் தரைமேல் காதை
ஒட்டவைத்துக் காத்திருப்பாய்; எங்கோ, யாரோ,
 உனைஅணுகும் அடியோசை கணிப்பாய்; பின்னர்,
எட்டவரும் அவ் வொலியில் காட்டு மோனம்
 இசைப் பிழம்பாய்ச் சுடரும், அதை எண்ணி நிற்பாய்.

பெண்ணே, நீ செய்த பிழை, கள்ளம் யாவும்,
பிய்த்தெறிந்து பிறந்த வண்ணம் நிறுத்திற்று உன்னை;
புண்ணிய நற் புனலென்ன முனிவன் சாபம்
புரைகழுவிப் புனிதவடி வாக்கிற்றுன்னை;
எண்ணரும் உன் வாழ்வு, நவை யெல்லாம் வீய,
ஏதமிலா நிறைவு பெறும்; அப்போது உன்தன்
கண்இமையில் நீ கண்ட ஆழங்காணுக்
கார்இரவின் பனி துளிர்த்துத் துடித்து மின்னும்.

இன்றளவும் கல்லாக நின்றாய்; அந்த
எல்லையிலா நெடுங்காலப் பாசி, நீண்டு,
மின்னலென உன் கூந்தல் படிய, இங்கே
மீள இன்று பிறந்தாய்; அப்புதிய வாழ்வில்
என்றுமுள நெடுமலைபோல் முதுமை காட்டி,
என்றென்றும் புதுமலர் போல் இளமை கொண்டாய்;
என்றுமுள வியன் பழமைப் பிழம்பாய் நின்றாய்;
என்றென்றும் எழிற்புதுமை வியப்பே ஆனாய்.

## 61

எருமை மாடு; அதைக் குளிப்பாட்ட அழைக்கும் சிறுவன், காட்சி இது தான். ஆனால் கவிதை உள்ளம் அங்கேயும் இனிமையை உணர்கிறது.

சித்திரை மாசம், உச்சி வேளை.
புழுங்கிய பொழுது புரண்டு நீண்டது.
ஓட்ட வெய்யிலில் உலர்ந்த வயல்வெளி
தண்ணீர் விடாயில் தவித்து வாய் பிளந்தது.
ஆற்றங் கரையின் அருகே இருந்து
' கண்ணே, வா ' எனக் கனிந்தது ஓர் குரல்.
ஏட்டை மூடினேன், எட்டிப் பார்த்தேன்.
எதிரிலே பெரிய ஓர் எருமை நின்றது.
திட்டுத்திட்டாய் உடம்பெலாம் சேறு;
சாந்தமும் பொறுமையும் ததும்பிய விழிகள்;
நீண்ட கரைமேல் நின்றது அவ் எருமை.
அருகிலே, ஆற்றில், முட்டளவுக்கு
நீரில் இறங்கி நின்றான் ஒருவன்,
சின்னஞ் சிறுவன். அவன்தான் எருமையை
' கண்ணே, குளிக்கவா ' என்று குழைந்தான்.
சிரித்தேன். கேலியாய்ச் சிரித்தேன். ஆனால்
என்ன மாயமோ, என்தன்
நெஞ்சில் ஓர் இனிமை நிழலாடியது.

## 62

போர்க்களத்தை நோக்கி, பேய்களைப் போல் சாடும் மனிதர்கள், போகுமுன் புத்த பகவானுடைய அருளை வேண்டு கிறார்கள். என்ன வேடிக்கை!

பாரிற் போரின் பறை கறங்கின;
பாழ்த்த மானிடர் பேய்களாய்,
கோரம் கோடி முகத்திற் கூட்டினர்,
கொடுமையே வடி வாயினர்.
கோரைப் பல்லைக் கடித்து உரப்பினர்;
கொத்தியே நர மாமிசம்
சேரச் சாவின்முன் வைக்கவே அவர்
செங்களத்தினில் சாடுமுன்,

அருளின் வாரிதியான புத்தன்தன்
ஆலயத்தினில் கூடினர்;
உரிமை உள்ளவர் போலவே, அருள்
ஒருவன் ஆசியை வேண்டினர்.
பரவி ஏத்தினர், பாடி வாழ்த்தினர்,
பாதம் தொட்டு வணங்கினர்,
தரன தத்தென பேரி தத்திடத்
தரை நடுங்கிடும் வேளையில்.

வெற்றி வேண்டி இறைஞ்சுவார், அவர்
வேதன் பாதம் பணிகுவார்;
வெற்றி வாளினல் அன்பை வேரற
வெட்டுவார், மறம் சுட்டுவார்.

சுற்றி எங்கும் திரிந்து காலடித்
தூரிலே துயர் மூட்டுவார் ;
வெற்றி வெங் கொடி சுட்டு வீழ்த்திய
வீட்டுச் சாம்பரில் நாட்டுவார்.

அழகின் ஆலயம், அருமைப் பண்புகள்
அரும்பு மன்றம் அனைத்தையும்
புழுதியாகப் பொசுக்குவார் ; அவர்
போகும் பாதையில் எங்கணும்,
பழனப் பசுமையில், மக்கள் பல்கிடும்
பட்டினக் கடை வீதியில்,
எழுதிச் செல்லுவார் இரத்த வெங்கறை ;
ஈடிலாத இப்பெருமையில்,

அருளின் வாரிதியான புத்தன்தன்
ஆலயத்தினில் கூடினர் ;
உரிமை உள்ளவர் போலவே, அருள்
ஒருவன் ஆசியை வேண்டினர்.
பரவி ஏத்தினர், பாடி வாழ்த்தினர்,
பாதம் தொட்டு வணங்கினர்,
தரன தத்தென பேரி தத்திடத்
தரை நடுங்கிடும் வேளையில்.

ஆயிரம் பெயர் கொன்ற பின், உடல்
ஆயிரம் சதைத் திட்டபின்,
பேயைப் போல நின்றுடுவார், ஜய
பேரி கொட்டி முழக்குவார்.

தாயையும் சிறு சேயையும் விழச்
சாடி, பாய்ந்திடு குருதியில்
தோயும் கால்தலைப் பிய்த்து வீசுவார்,
துள்ளிக் கொக்கரித் தாடுவார்.

பொய்யை மக்கள் மனத்தில் நாட்டவும்,
புழுதி மாயங்கள் செய்யவும்,
பொய்யை மெய்யெனக் காட்டி எங்கணும்
பேரிருட் பனி பெய்யவும்,
உய்ய ஆண்டவன் தந்த உயிரினில்
உள்ள இனிமை முழுதிலும்,
வெய்ய நஞ்சினை ஊற்றவும், பெரு
வீரம் கொண்டவர் ஆதலால்,

அருளின் வாரிதியான புத்தன்தன்
ஆலயத்தினில் கூடினார்;
உரிமை உள்ளவர் போலவே, அருள்
ஒருவன் ஆசியை வேண்டினார்.
பரவி ஏத்தினார், பாடி வாழ்த்தினார்,
பாதம் தொட்டு வணங்கினார்,
தரன தத்தென பேரி தத்திடத்
தரை நடுங்கிடும் வேளையில்.

## 63

என்றே, என்றே, காலத்தின் ஆதிமுதற் கலக்கத்தின் இருளில், ஆப்பிரிக்கா கண்டம் உலகின் மற்றைய நிலப்பகுதிகளை விட்டுப் பிரிந்தது. அதன் உள்ளே, பயந்து, பயந்து பயங்கர வடிவம் பெற்ற மனிதன், பேயுலகச் சூழலை அமைத்துக் கொண்டு ஏதோ வாழ்ந்தான். நாகரீகம் என்ற போர்வையைப் போர்த்திக் கொண்டு வெள்ளையர்கள் வந்தார்கள்; ஆப்பிரிக்காவின் இருண்ட காடுகளில், எல்லையற்ற தீமை கோரத் தாண்டவம் புரிந்தது. மனிதன் இழைத்த இந்தக் கொடுமையை ஆப்பிரிக்கா மன்னிக்குமா?

அன்றென்றே காலத்தின் ஆதிமுதற்
கலக்கத்தின் இருள் மையத்தில்
நின்று, இந்த உலகையெலாம் நிருமித்த
நெடுஞ்சிற்பி, தன்கை செய்த
ஒன்றும் தன் மனத்திற்குப் பொருந்தாமல்
உளுத்துப் போய் விட்ட தென்னத்
தன் திறலைச் சிறுபிள்ளை மடைமைஎனத்
தலையாட்டித் தெழித்தபோது,

அலை ஒன்று விம்மியது; கிழக்கிருந்தே
ஆப்பிரிக்க நிலமே, உன்னை
நிலை குலையப் பிரித்து எங்கோ நிறுத்தியது
நீளிரவாய் இருண்ட பாழில்.
வலிமை மிகு பேய் மரங்கள் சூழ்ந்தெங்கும்
காவல் செய் தனிமைக் காட்டில்,
உலையுமனம் தன்னைத்தான் உண்டழிய
நெடுங்காலம் நீயும் நின்றாய்.

நீரினிலே, நிலத்தினிலே, நிழலாடும்
அடையாளம் யாவும், கூர்ந்து
நேரும் இயல் கண்டு அவற்றின் மருமத்தை
நெடும் புலனுல் அறிந்தாய்; நெஞ்சில்
பாரினுளே பதுங்கியுள்ள மாந்திரிகம்
படரவிட்டாய்; உணர்வுக்கப்பால்
காரிருளிற் களிக்கின்ற பேயுலகச்
சூனியத்தின் சடங்குங் கண்டாய்.

எல்லையிலாப் பயங்கரமும் பயங்கரமாய்
எண்ணியஞ்சும் கவந்தம் ஆனுய்;
தொல்லைதரு நரகபயம் தொலைத்திடவே
அதை விஞ்சும் கொடிய வெம்மைக்
கொல் அசுரத் தோற்றத்தை மேற்கொண்டாய்,
குமைந்திட்டாய்; மனிதன் மாண்பை
அல்லினுளே அழுக்கேறி அழியவிட்டுப்
பழி சுமந்தாய், ஐயோ, வீழ்ந்தாய்.

ஓநாயின் கோரைப்பற் கூர்மையினும்
கூர்மைமிகு கொடுமைக்காரர்;
ஆனு உன் இருளடைந்த பாழ் வனத்தின்
குருடான இரும்பு நெஞ்சர்;
கானேறு மிருகமெனக் கதிக்கின்ற
பேராசை கடித்துத் தின்னக்
கூனுகி, நாகரிகப் போர்வை விடுத்து
அம்மணமாய்க் குதிக்கும் பேயர்.

எண்ணத்தில் எள்ளளவும் வெட்கமிலார்,
இரக்கமிலார், மனிதர் தம்மைக்
கண்ணி வைத்துப் பிடிக்கின்ற கலைபயிலும்
கொலைவேடர், கசடர், வந்துன்
மண்ணதனிற் கால் வைத்தார்; நீ அழுதாய்;
அவ்வழுகைக் குரலும் தேய்த்தார்.
கண்ணீரால் இரத்தத்தால் சேருகிக்
கலங்கியதுன் காட்டுப்பாதை.

நாணமிலார், உன் மானம் சூறையிட்ட
நலிவு துயர் வரலாற்றின் மேல்,
ஆணி நிமிர் செருப்பழுத்தி அழியாத
பழிச் சுவட்டைப் பதித்தநாளில்,
காணுத கொடுமையெலாம் நீ கண்ட
காலத்தின் நீண்ட போக்கில்,
சேணில், அலை கடற்கப்பால் அவர் நாட்டுச்
சிற்றூரில், பேரூர் தம்மில்,

ஓயாமற் கோயில்மணி ஓங்கி ஒலித்து
இறைவன்தன் பரலோகத்தின்
மாயாத அருள் மாண்பை மக்களுக்கு
முழங்கியது வானம் தேய;
தாயானுர் மதலையரை எடுத்தணைத்தார்,
தாலாட்டுப் பாடி நின்ருர்;
வாயார அழகினுக்குத் தோத்திரங்கள்
கவிவாணர் வழங்கிச் சென்ருர்.

இன்றங்கே மேற்றிசையில் அத்தமன
வான் முழுதும் புழுதிச் சூறை;
மன்றெங்கும் இருட்குகை விட்டூர்ந்து வந்த
மிருகத்தின் நாச ஊளை;
பொன்றியது பகலென்றும் என்று மெனப்
பதைத் தொலிக்கும் ஊழிக்காளம்;
இன்றிங்கே இவ்வழிவுக் காலத்தில்
பாடவந்த கவியே, நீ கேள்.

போய், அந்த ஆப்பிரிக்கா பொறப்பழிந்து,
கற்பழிந்து, புலம்பிச் சோரும்
வாயில் நின்று அவள் இந்த வையகத்தை
மன்னிக்க வேண்டி நிற்பாய்.
நோய் முற்றிப் பித்தேறி, உலகமெலாம்
பிணக்காடாம் கூச்சலூடே,
வாயார உன் சொல்லும் மானிடத்தின்
மங்கலமாய் எழுக, வாழ்க.

## 64

'என் தாய் நாடு எல்லா வகையிலும் நிறைவுபெற, இறைவனே, அருள்க.'

எனது தாய்நாட்டு நீரும் நிலனும்,
எனது தாய்நாட்டுக் காற்றும் கனிகளும்,
இனிமை ததும்பிட, இறைவனே, அருள்க.

என் தாய் நாட்டு வீடும் காடும்,
என் தாய் நாட்டுக் கடையும் கழனியும்,
என்றும் நிறைந்திட, எந்தாய், அருள்க.

என்றன் நாட்டினர் ஆசையும் ஆணையும்,
என்றன் நாட்டினர் சொல்லும் செயலும்,
ஒன்றிட உண்மையில், ஒருவனே, அருள்க.

என்றன் நாட்டு மக்கள் அனைவரும்
ஒன்ருய், உயிரும் உள்ளமும் இசைந்து,
வென்றி வாழ்வுற, விமலனே, அருள்க.

## 65

'இறைவா, என் தாய் நாடு சுதந்திர ஒளியில் கண் மலர அருள் செய்.'

எங்கே நெஞ்சில் அச்சமே இல்லையோ,
எங்கே மக்கள் நிமிர்ந்து நிற்பரோ,
எங்கே கல்வி கட்டிலாது ஓங்குமோ,
எங்கே குறுகிய தன்னலச் சுவர்களால்
பின்னமாய் உலகம் பிளந்திட வில்லையோ,
முன்னர் என்றோ முடிந்த பழமையாம்,
வெறித்த பாலையில் வீழ்ந்து சுவறி
அறிவாம் ஆறு எங்கு அறுவதில்லையோ,
உண்மையின் ஆழத்து ஊன்றியே சொற்கள்
ஒண்மையில் எங்கே ஓங்கி மலருமோ,
எங்கே தளர்ச்சியே இல்லா முயற்சி
எங்கும் ததும்பி ஏகமாய்ப் பொங்கும்
நிறைவினை நோக்கிக் கரங்களை நீட்டுமோ,
அறுதி இல்லாமல் அகன்று அகன்று அகலும்
சிந்தையில், செயலில், சேர்ந்திட மனமும்
உன்தன் அருளால் எங்கே முந்துமோ,
அந்தச் சுதந்திர அமர நாட் டொளியில்
எந்தையே, என் தாய் நாடு கண்மலர்க.

## 66

'அவன் கனுப்பித்தன்; ஏதோ பாடிக்கொண்டு எங்கோ திரிபவன்; அவனை வீட்டருகில் வரவிடாதே; அவனை நெருங்க விடாதே' என்று மகளைப்பார்த்து எச்சரிக்கிருள் தாய்.

இந்தத் தாயைப் போலத்தான் உலகம் கவிஞர்களை எண்ணுகிறது என்பது பாட்டின் குறிப்போ?

வீட்டுக் கழையாதே, பெண்ணே—அந்த
வெற்று வெறும் கனு வீணனைப் பாணனை,
வீட்டுக்கழையாதே, பெண்ணே.

காட்டு வெளியில் உன்பக்கம்—இருட்
கங்குலில் ஏதோ தனியாய் அலைகுவான்,
ஏட்டினிற் கண்டறியாத—விந்தை
ஏதோ ஓர் நாட்டின் விசித்திரம் பேசுவான்;
பாட்டினில் கேட்டறியாத—பண்கள்
பாடி ஒற்றைத் தந்தி வீணையை மீட்டுவான்;
வீட்டுக் கழையாதே, பெண்ணே—வெறும்
வெற்றுக் கனவினில் வீழும் அப்பாணனை,
வீட்டுக் கழையாதே, பெண்ணே.

வழக்கப்படி உபசாரம்—அவன்
வந்தாலும் ஏதும் நீ செய்திடவேண்டாம்;
கிழக்கு வெளுப்பதன் முன்னம்—புதுக்
கீதங்கள் பாடி எங்கோ அவன் போவான்;

தழைக்கும் சுதந்திரம் பாட—புதுத்
தண்ணொளி இங்கு தளிர்த்தது பாட
அழைக்க அவன் செல்லுவானும்—அவன்
யாவனோ இங்கது யாவரே கண்டார்?
வீட்டுக் கழையாதே, பெண்ணே.

## 67

'தீபாவளி வந்தது. விளக்கேற்றுவோம். வாழ்வை ஒளி மயமாக்குவோம்.'

பனியை விரித்தது மாரி
பாயிருள் வான்சுடர் மீன்மேல்.
'மனிதா, உடனே வா, வா,
மணிவிளக்கேற்றியே விரைவில்'
என இங் கழைத்தது பள்ளத்து
எங்கிருந்தோ ஒரு குரலும்.

மலரை மறந்தன மரங்கள்;
மலங்கி அலந்தது காடு;
கல கல வென்னவே கூட்டும்
கானம் மறந்தன பறவை;
உலராப் படுகையில் அலரை
உதிர்த்து வெறித்தன கோரை.

வருவாய், தீபாவளியே,
வறண்ட இவ்விருள் வெறுமை
உருவி அதனுளே ஒளிந்த
ஒண்சுடர் ஆயிரம் ஏற்று.
பரவி அமர நல்லொளிக்குப்
பாடிடு, பாடு பல்லாண்டு.

குன்றின தாரகைக் கூட்டம்;
    குமைந்து கலங்கியது இரவு;
‘உன்தன் ஒளி விளக் கேந்தி
    உடனே வருவாய், மனிதா,’
என்றிங் கழைத்தது வெளியில்
    எங்கிருந்தோ ஒரு குரலும்.

கோயில் பாழாகிவிட்டது. பூஜை இல்லை, திருவிழா இல்லை, கோயிலில் உள்ள சிலா மூர்த்தி மட்டும் அழியாமல் உள்ளது. என்ன பயன்?

பாழடைந்த கோயில் உள்ளே படிந்த மூர்த்தீ,
பட்டது யாழ் இனி உன்னைப் பாடாதென்றும்;
ஆழ நெடுங் குரல் எழுப்பி, மணியும் அந்தி
ஆராதனை வேளை அறைந்திடாது;
சூழவருங் காற்றெடுங்கி உன்னை வாழ்த்தச்
சொல்லொன்றும் இல்லாமல் ஊமையாச்சு;
பாழடைந்த கோயில் உள்ளே பரிந்த மூர்த்தீ,
பாழொன்றே உன்தலத்தில் வாழலாச்சு.

உன்பூசைக்கு உதவாமல் ஒதுங்கும் பூக்கள்
உணர்த்துகின்ற நறுஞ்செய்தி தாங்கி வந்து,
பொன்றி விழும் நெடும் பாழ் உன் கோயில் புக்குப்
புலம்பும் காண், மனம்போல அலையும் தென்றல்.
என்றோ ஓர் வரம் கேட்டு, உன் அருளுக் கேங்கி
இன்னும் அது கிட்டாத ஏழை யாரோ
கன்றி உளப் பசியுடனே, இருளும் தீயும்
கலங்கும் அந்திப் புழுதியிலே கலங்கி நிற்பான்.

மேள தாளம் ஒன்றும் இல்லா வெறுமையாக
　　மேவும் இங்கே உற்சவங்கள்; பாழ் மோனத்தில்
காள இருள் இரவுபல உன் பூசைக்காம்
　　கைவிளக்கும் இல்லாமல் கழிந்து செல்லும்;
நீள நினைந்து எழில் சமைக்கும் சிற்பி வார்த்த
　　நெடுஞ்சிலைகள் ஒருகோடி சிதற, நீயோ
நாளெல்லாம் மாளாத நலிவில் ஊன்றி
　　நாடுவார் இன்றி இந்தப் பாழில் நிற்பாய்.

## 69

கூட்டிலே ஒரு பறவை, கூட்டுக்கு வெளியிலே ஒரு பறவை. இரண்டும் தவிக்கின்றன, கூடமுடியவில்லையே என்று.

கூட்டில் அடைந்த பறவையும்—கோலக்
        காட்டில் திரிந்த பறவையும்—விதி
கூட்டிய நேரம் குறுகவே—அன்று
        கூட்டு நிழல் நின்று பேசின.

காட்டு வெளியில் விடுதலை—முற்றும்
        கண்ட பறவை கனிவுடன்—'அடி
காட்டினில் ஒன்ருக வாழலாம்—என்தன்
        கண்ணே, பறந்து வா' என்றது.

'எட்டி அங்கே செல்ல வேண்டுமோ—கூட்டில்
        இருவருமாகவே வாழுவோம்'—என்னக்
கட்டினில் ஓய்ந்த பறவையும்—குரல்
        கம்மி நடுங்கி உரைத்தது.

'சின்னஞ் சிறிய உன் கூட்டினில்—கம்பி
        சேர்த்து வளைத்த சிறுமையில்—என்
வன்னச் சிறகை விரிக்கவும்—கூட
        வாகில்லை' என்றது காட்டுப் புள்.

பந்தத்தில் ஆழ்ந்த பறவையும்—'ஐயோ,
        பாழாய்ப் பெருகும் உன் வானிலே—சென்ருல்
எந்தவிதம் அங்கே குந்துவேன்—என்னை
        என்ன செய்வேன்?' என்றயர்ந்தது.

'காட்டின் இசை, கண்ணே, கூட்டடி,' எனக்
காட்டுப் பறவை தவித்தது—சிறு
கூட்டுப்பறவை மலைத்தது—'அன்பே,
கூடி என்னோடு இங்கிருந்திடின்,

நாட்டினில் பண்டிதர் நாட்டிடும்—பேச்சு
நாகரிகம் சொல்லி வைப்பன் யான்—மிக
மேட்டிமையாகவே வாழலாம்—சுகம்
மேவலாம் கூட்டினில்' என்றது.

'பாட்டையும் கற்பித்தல் ஆகுமோ—மொட்டைப்
பாடமோ?' என்றது காட்டுப் புள்.
'காட்டின் சுதந்திர கீதங்கள்—பாடக்
கற்றிலனே' எனும் கூட்டுப் புள்.

உள்ளம் இரண்டும் பேரன்பினில்—ஆசை
ஓங்கும் கடலாகப் பொங்கினும்—சிறை
துள்ள ஒன்றாகப் பறந்து வான்—தொடும்
சூழ்ச்சியைக் காணாது உலைந்தன.

பஞ்சரக் கம்பி இடுக்கிலே—பார்த்துப்
பார்த்துப் பதைத்தன என்னிலும்—அவை
நெஞ்சம் கலந்து மருவவே—இங்கு
நேர்வது ஓர் காலத்தும் நேருமோ?

கட்டுக் கடங்காத ஆசையில்—உள்ளம்
கன்றிச் சிறகு சிலுப்பின—'என்தன்
கிட்ட வா, கிட்டவா, கிட்டவா—இன்னும்
கிட்ட வா' என்றவை கேவின.

‘கூட்டுக் கதவை உடைத்துள்ளே—போகக்
கூடவில்லை’ எனும் காட்டுப் புள்.
‘ஓட்டைச் சிறகும் ஒடிந்ததால்—ஐயோ,
ஓய்ந்து விட்டேன்’ எனும் கூட்டுப் புள்.

## 70

வரம்புக்குள்ளேதான் வாழ்வு, வரம்பு மீறினுல் சாவு.

விளக்கும் அணைந்தது, விளக்கும் அணைந்தது.
வீசிடும் காற்றினில் வீயும் என்றே
விளக்கினைக் கோடியால் மூடி வளைத்தேன்,
விளக்கும் அணைந்த ததனுலே.

பூ ஏன் அவிந்தது, பூ ஏன் அவிந்தது?
பொங்கி எழும் அன்பு மேலீட்டால்,
பூவினை மார்பொடு புல்லி அணைத்தேன்,
பூவும் அவிந்த ததனுலே.

ஆறு ஏன் வறண்டது, ஆறேன் வறண்டது?
ஆற்றை எனக்கே ஆட்படுத்த
ஆற்றினிலே அணை போட்டுத் தடுத்தேன்,
ஆறும் வறண்ட ததனுலே.

வீணை உடைந்தது, வீணை உடைந்தது.
வீணையின் ஆற்றலுக் கப்பாலே,
வீணையில் ஓர் ஒலி வேண்டி முடுக்கினேன்,
வீணை உடைந்த ததனுலே.

## 71

இங்கேயே, இந்த உலகிலேயே, இவ்வாழ்க்கை உறவுகளின் வடிவாகவே, இறைவன் இருக்கிறுன் என்பதை உணராமல், எங்கோ அவனைத் தேடிச் செல்கிறுன் பேதைத் துறவி.

நட்ட நடுநிசி, துறவி கூறினுன்:
' விட்டேன் எனது வீடும் வாசலும்.
இறைவனைக் காண எழுந்தேன், போகிறேன்.
குறுகிய புலன்களின் காட்சியில் குமைத்து எனை
ஆளு மாயையில் அழுத்துவது யாரோ?'
' நானே ' என்ருன் இறைவன். ஆனுல்
ஏழைத் துறவியின் காதிலே அக்குரல்
வீழவே இல்லை. அருகிலே, களிப்பெனும்
போதையில் தன்னை மறந்து, அவன் மனைவி
காதல் மகவைக் கட்டி அணைத்துத்
துயின்றனள். கண்டான். ' சூழ்ச்சியில் என்னை
அயர வைக்கும் அயரா மாயையின்
கானலாம் இவர்கள் யாவரோ?' என்ருன்.
' நானே ' என்றனன் இறைவன். அக்குரல்
துறவியின் காதில் ஏறவே இல்லை.
' இறைவனே, எங்குளாய்? ' என்று புலம்பினுன்.
' இங்கு தான் ' என்றனன் இறைவன். ஆனுல்
எங்கென, எங்கென ஏங்கிய துறவியின்
காதிலே இக்குரல் ஏறவே இல்லை.
ஏதும் உணரா ஏழ்மையில் அழுந்தினுன்.

எதனையோ தேடி எங்கோ செலும் அவன்
மதலை, தன் தூக்கம் கலைய, வெருண்டு,
கத்தி, தாயைக் கட்டிக் கொண்டது.
‘ பித்தா, திரும்பி வா ’ என்றான் இறைவன்.
கடவுள் குரலும் கடுகி வாராத
நெடுந்தொலை நடந்தான் துறவி. ‘ ஐயோ,
என்னைத் தேடி எங்கோ போகிறான்,
என்னையே துறந்து ’ என்று இரங்கினான் இறைவன்.

உலகம் என்ற கொடியிலிருந்து பறித்த அந்த மலர் உறுத்தியது; பிறகு, மடிந்தது. வேறு மலர் பறிக்கவோ நேரமில்லை. பெற்ற வேதனைதான் மிச்சம்.

உலகே, உன்தன் மலர் கொய்தேன்,
உளத்தோடு இறுக அணைத்திட்டேன்;
மலரில் மறைந்த முள் நிமிர்ந்து
மாட்டி நெஞ்சில் உருவியது;
கலையும் பகல் இங்கு உலர, இருள்
கனலும் அந்தி வந்தவுடன்,
மலரோ மாய்ந்தது, அது தந்த
மறுக்கம் ஒன்றே எஞ்சியது.

மலர்கள் வேறு இங்கு எத்தனையோ
மணமும் எழிலும் ஏந்தினவாய்
உலகே, உன்மேல் பூக்கும்; எனில்
ஓடி மலர்கள் சேர்த்தே நான்
அலையும் காலம் அழிந்தது; இருள்
அடைவில், துணையாய் எனக்குதவ
மலரோ இல்லை. அது தந்த
மறுக்கம் ஒன்றே எஞ்சியது.

## 73

'வீடு, வாசல், நிலம், கரை, குடும்பம், ஒன்றும் எனக்கில்லை. நான் பொன்மான் தேடிப்போகின்றவன். சிரிக்கிறீர்களா? சிரியுங்கள். பெயர் தெரியாத நாட்டின் பெரு வெளியில் எங்கோ, எங்கோ, பொன்மான் தேடிப் போகின்றேன்.'

பொன்மான் தேடிப் போகின்றேன்;
புரியாது எள்ளி நகைக்கின்றீர்.
ஒன்றும் கையில் எட்டாத
உலவாக் காட்சி தொடர்கின்றேன்.
என்றோ ஒருநாள் பொன்மானை
எட்டிப் பிடிக்கும் ஆசையினால்
குன்றும் குழியும் நடந்து பெயர்
குறியா நாட்டில் அலைகின்றேன்.

சந்தைக் கடையில் ஏதேதோ
சரக்கு வாங்கி வீட்டிற்கு
நைந்து சுமந்து செல்கின்றீர்;
நானோ, வீடொன்று இல்லாமல்,
வந்து வீசும் பெருங் காற்றின்
வசமாய் நிற்பேன்; இம்மாயம்
வந்த வகையை நான் அறியேன்;
வன்னப் பொன்மான் தொடர்கின்றேன்.

ஒன்றும் கவலை எனக்கில்லை;
உற்ற உடைமை அனைத்தையுமே
என்றோ எனக்குப் பின், தொலைவில்
எறிந்து வந்தேன், திரிகின்றேன்.
குன்ற ஆசை, பொன்மானைக்
கொணரும் ஆசை, அதனாலே
குன்றும் குழியும் நடந்து பெயர்
குறியா நாட்டில் அலைகின்றேன்.

# 74

பறவையே, அந்தியும், தனிமையும் வந்தால் என்ன? கூடு இல்லாத சூனிய வெளியே உன்னைச் சூழ்ந்தாலும் என்ன? பதறாதே. சிறகை ஒடுக்கிச் சிதைந்து விழாதே.

அந்தி வந்தது ஆடி அசைந்து;
வந்ததும் பாடல் அனைத்தும் ஓய்ந்திடக்
காட்டியது சைகை. கானம் அவிந்தது,
பாட்டையில் நாளெலாம் உன்னுடன் பறந்து
கூடவே வந்த குருகினம் சோர்ந்தன;
தேடி ஓய்வைச் சென்றன எங்கோ;
களைத்தனை நீயும்; ககனம் இருண்டது;
உளையும் அச்சம் உறைந்தது இருளில்.
பறவையே, இது கேள்: உளம் பதறாதே.
சிறகை மடக்கிச் சிதறி விழாதே.

என்ன அது? உன் காட்டுப் பசுந்தழை,
பின்னிய நிழலா? இல்லை; நீண்டு
கரும் பாம்பு என்ன விம்மும் கனைகடல்.
அரும்பு மல்லிகை ஆடலா அங்கே?
இல்லை; சுழன்று பளிச்சிடும் வெண்நுரை;
எல்லை இல்லாமல் விரியும் எறிகடல்.
வெயில் ஒளி மின்னும் காட்டு வெளியும்,
துயிலுக்கு உகந்த உன் கூடும், எங்கேயோ?
பறவையே, இது கேள்: உளம் பதறாதே.
சிறகை ஒடுக்கிச் சிதறி விழாதே.

வழியெலாம் உனக்குத் தனிமையும் இரவுமே.
நிழலெனத் தொலைவில் நிமிர் மலைக் கப்பால்,
வைகறை உறங்கும். மூச்சுத் திணறவே,
நகராதிருந்து, நகரும் பொழுதைத்
தாரகை கணக்கிடும். ஆழ்ந்த இருளாம்
வாரியில் நீந்திடும் வற்றிய நிலவு.
பறவையே, இதுகேள்: உளம் பதருதே,
சிறகை ஒடுக்கிச் சிதைந்து அழியாதே.

நன்மை வருமா? நம்பிக்கை இல்லை.
துன்பம் வருமோ? துணுக்குறல் இல்லை.
பாதையில், துணையோ, பேச்சோ, குரலோ,
காதொடு காதாய்க் குலவவோ இல்லை.
வீடில்லை. ஓய்ந்த தலையைச் சாய்க்கக்
கூடில்லை. என்ருல், என்னதான் உண்டோ?
எதுவும் இல்லை. எல்லையில் வானமும்
பதைக்கும் உன் சிறை இரண்டுமே உண்டு.
பறவையே, இதுகேள்; பதறி விழாதே,
சிறகைச் சுருக்கிச் சிதைந்து அழியாதே.

## 75

### அஞ்சலி

உன்தன் பாத நிழலில் உள
உலகம் இதனைப் புலன் ஐந்தும்
சென்று விரிந்து தொட்டு உன்னைத்
தேறி, அஞ்சலி செய்திடுக.

துன்னும் மழையின் சுமை ஏந்தித்
துவண்டு தாழும் கார் முகில் போல்,
நின்றுன் படியில் தாழ்ந்து எனது
நெஞ்சம் அஞ்சலி செய்திடுக.

என்தன் பாடல் எலாம் ஒன்ருய்
இசைந்து நதியாய்ப் பெருகி, ஒரு
குன்ரு மோனக் கடலில் உனைக்
கூடி அஞ்சலி செய்திடுக.

வீடு திரும்பும் ஏக்கத்தில்
விம்மி இரவு பகலாக
கூடு நோக்கி விரைகின்ற
குருகின் கூட்டம் அதுவே போல்,

நாடி அழியாப் பெரு வீட்டை,
நாளும் என்தன் வாழ்வெல்லாம்,
ஓடி ஓடி உனைத் தேடி,
ஒருவா, அஞ்சலி செய்திடுக.

## 76

'இறைவனே, நீ யாரா, எதுவா? சொல்கிறேன், கேள்'.

வாழ்வென்ற கரைமீதில் அலைமோதும் உதயவொளி
வாரிதியின் பொன்னுரையும் நீ;
வீழ்ந்தெங்கும் இலைசிந்து பருவத்து வெண்மலரில்
வீசு சுடர் நீர்த்துளியும் நீ;
தாழ்கின்ற கார்மேக வானத்துச் சேண் வெளியில்
தளிர்க்கின்ற வண்ண வளைவாய்ச்
சூழ்ந்திங்கு புழுதிக்கும் சோபை உயிர் அருள்கின்ற
சோதி எழில் வானவில் நீ.

கூனிவளை பிறையாக வெண்மேகம் சூடிவரு
கோலத்தின் பொற்கனவு நீ;
மானிடரும் இம்மண்ணிற் காண ஒளிர் விண்ணுலக
மாயத்தின் மறைபொருளும் நீ;
போன பல காலம் யான் எண்ணுத இப்பிறவிப்
புண்ணிய விசாலமாக
ஆனவொளி, என் கவிதை யான ஒளி, பரமோன
ஞானவொளி நிறைவு நீயே.

மேவியே மாதிரம் அனைத்தையும் நிறைத்தோங்கி
மீறும் எழில் உயிர் ஒளியினைப்
பாவியேன் காணவும் கதவினைத் திறந்தருள்
பாலிக்க நீ வந்ததால்,

நாவினுற் சொல்லிடவும் மாளாத மந்திர
நலந் திகழும் ஒரு சொல்லும் நீ;
தாவியே என்தனைக் கட்டிடும் தளைகளாய்த்
தழைக்கின்ற விடுதலையும் நீ.

## 77

'ஆண்டவனே, உன்னிடம் கையேந்திப் பிச்சையென வந்தேன். வெறுங்கையோடு என்னைத் திருப்பிவிட்டாய். ஏன் என்று இப்போது தெரிகிறது. மற்றவர்கள் உன்னிடம் வந்து, பெற வேண்டியவற்றையெல்லாம் பெறட்டும். நான் கடைசி வரையில் காத்திருப்பேன். தனியாக உன்னிடம் வருவேன், ஒன்றையும் பெறுவதற்காக அன்று; என்னையே தருவதற்காக.'

கையேந்திப் பிச்சை என வந்தேன், என்னைக்
கருணையினால் வெறுங்கையாய் அனுப்பி விட்டாய்.
ஐயா, நான் போம்போது பார்த்தேன், உன்தன்
அருள் நோக்கில் குறுநகை ஒன்று அலர்தல் கண்டேன்.
மெய்யாய் அந்நகையில் ஒரு பாடம் கற்றேன்;
வீசி என்தன் வரையோடு விளியச் செற்றேன்.
கையாலே எனக்குரிய எல்லாம் முற்றும்
கரவின்றித் தருவதற்கே காத்து நிற்பேன்.

காலை முதல் பெருந் திரளாய்க் கூடி உன்தன்
கதவருகே காத்திருப்பார் தேவை யாவும்,
மூல முதற் பொருளே, உன் கொடையினாலே
முழுதும் நிறைவெய்தட்டும் முதலில்; பின்னர்,
மாலை வரும், இருள் வீழும், சத்தம் ஓயும்,
மற்றென்றோ தாம் பிறக்கும் முன்பு ஓர் நாளில்
மூல ஒளி இருளோடு மூட்டும் போரின்
முறைபாடும் காவியத்தைக் கேட்ப போல,

தாரகைகள் நெடுவானில் தயங்கும்; அந்தச்
சாந்திமய வேளையினில் தனியே நானும்
நேராக உனைவணங்க வருவேன்; வந்து
நின்மலனே, உன்பாதம் தனிலே என்தன்
தீராத வேட்கையினை வைத்து, என் வாழ்வு
தேர்ந்த சிறு காணிக்கை அதுவே என்பேன்;
சீரறியா என் யாழை எடுத்து உன் கையால்
செவிகுளிரத் திருத்தென்ன வேண்டி நிற்பேன்.

## 78

'இறைவனே, உன்னிடமிருந்து நெடுந்தூரம் விலகிச் சென்றோம்; கூனிக் குறுகி, உன் பெருமையை அழித்தோம்; இருட்டிலே உழல்கிறோம். உன் ஒளிவிளக்கை உயர்த்தி, எங்களுக்கு வழிகாட்டு.'

உன்னொளி விளக்கினை உயர்த்தியே, வழியினை,
ஒருவனே, உணர்த்துவாயோ?
உன்னருகிருந்து யாம் விலகினோம், நெடுந்தொலை
ஒதுங்கினோம், வழி தவறினோம்.
என்றுமே உய்விலை எனுமிருள் எண்ணம் எம்
நெஞ்சினை அமுக்கி நிற்க
துன்றிய பயநிழல் சூழ்ந்திடும் பாழிலே
தொலைக்கிறோம் எமது பொறியை.

பிச்சையை நச்சியே வீழ்கிறோம் புழுதியில்;
பிறர் எமைப் பயமுறுத்த,
எச்சிலில் உளைகிறோம்; எங் தமது ஆண்மையை
எள்ளும் இங் நிலையில் வீழ்ந்து,
பிச்சராய்க் குறுகினோம், பெரும் பழி இழைக்கிறோம்,
பெரும, உன் பெயரினுக்கே.
இச்சதி இழிந்த யாம் உன் மக்கள் என்பதால்,
இறைவ, உன் பெருமை அழியும்.

எந்தையே, எம் சிறு விளக்கினை இவ்விதம்
ஏழையேம் அவித்து விட்டோம்.
சிந்தையைக் கவ்விடும் பயமெனும் அலகிலாச்
சிறுமையில், இவ்வுலகினை,
தந்தையும் தாயுமில் அந்தகச் சதிரெனத்
தருக்கினேம், உனை மறுத்தோம்.
உன்னெளி விளக்கினை உயர்த்தியே, எந்தையே,
உய்ந்திட உதவிடாயோ?

## 79

'புத்த பகவானே, சாந்தி நிலையமே! இவ்வுலகம் வெறுப்பிலே, ஆசை வெறியிலே அழிகிறது. மறுபடியும் இங்கே பிறந்தாவது எங்களைக் காப்பாற்று.'

வெறுப்பெனும் வெறியிலே விளிந்தது வையம்;
விளிவிலா நெடிய வெங் கொடுமை
இறைத் தெழு போர்கள் அடர்ந்தன; முடியா
இன்னலே முட்டிய தெங்கும்;
அறத்தினை எள்ளி அலமரும் சிறுமை
அடைவினிற் கோடின வழிகள்;
உறுத்து பேராசைப் பேய்க் கொடி காடாய்
ஓங்கியே வளைத்ததிவ் வுலகை.

எல்லையில்லாமல் இயற் பெரு வாழ்வே,
இங்கு நீ மறுபடி பிறந்து,
தொல்லுலகு அதனைத் தேற்றென, உன்னைத்
தொழுதன உயிரெலாம்; நாளும்
எல்லையில் இனிமைத் தேன் சொரிந்து அன்பின்
இதழ்கள் உன் ஒளியிலே விரிய,
நல்லன சூழும் என்ன ஓர் உறுதி
நாட்டிடு உன் நலிவிலாக் குரலில்.

பந்தமிலாத பாவன, அமைதிப்
பண்ணவ, அலகிலுன் அருளை
எந்தமக் குதவி எமதுபாழ் நெஞ்சின்
இருட்கறை துடைத்திட வருக!

நித்தியமான நிதியினை எமக்கு
நித்தமும் நல்கிடும் நிமலா!
சத்தியத்துறவின் சாதனை தருவாய்,
தருக்கினைப் பறித்தெமைப் புரப்பாய்;
சுத்த மெய்ஞ் ஞான உதயவான் புதுமைச்
சோதியில் குருடர் கண் பெறுக;
செத்துள மனிசர் திரும்பவும் வாழ்வின்
திறலுற, உயிரெலாம் தழைக.

சஞ்சல நோயால் மனிதன துள்ளம்
சதைந்தது; தன்னலம் வீசும்
நஞ்சினால் உயிர்கள் நலிந்தன; வறட்சி
நரகிலே துடித்தன; தமது
நெஞ்சிலே குமுறும் வெறுப்பினை நெற்றி
நடுவிலே குருதியால் எழுதி
வெஞ்சமர் முறுக்கும் வெறுமையை, வெற்றி
வீறெனத் தருக்கின நாடு.

பந்தமிலாத பாவன, அமைதிப்
பண்ணவ, அலகிலுன் அருளை
எந்தமக் குதவி எமதுபாழ் நெஞ்சின்
இருட்கறை துடைத்திட வருக!

உன்னருள் அபயக் கரத்தினால் மற்றிங்கு
உழன்றிடும் மக்களை அணைத்துப்
பின்னமாய்ப் பிரிந்து பேதுறும் மனிசர்
பேதைமை களைந்து, உயிர் யாவும்

ஒன்றெனக் கருதும் உணர்வினில் ஓங்கி
ஒருமை நல்வாழ்வுறப் பணிப்பாய்.
வன்னமாய் அவர்தம் வாழ்விலே எழிலும்
வளர் நடம் புரிந்திட வனைவாய்.

பந்தமிலாத பாவன, அமைதிப்
பண்ணவ, அலகிலுன் அருளை
எந்தமக் குதவி எமதுபாழ் நெஞ்சின்
இருட்கறை துடைத்திட வருக!

## 80

'ஆடும் பெருமானே, உன் நடனம், இங்கே, எண்ணிறந்த வடிவாய், இன்ப துன்பமாய், இளமையாய், முதுமையாய்ப் பொங்குகிறது. உன் உலவாக் கூத்து என்னை ஆட்கொள்க! உன் வண்ணம் என் சிறு வாழ்விலே படிக!'

ஆடும் அரசே, உன் பாதம்
அசையுந் தோறும், என் வாழ்வில்
நீடும் தளைகள் தெறித்திடுக,
நின்றென் உயிரின் ஆழத்தில்
பாடும் அமரக் குரலிலெழும்
பண்ணில் நெஞ்சு பதிந்திடுக.
வீடு பெறுக, விடுதலையாம்
விஞ்சை தனிற் கண் விழித்திடுக.

சந்தக் கவிதைப் பீடமெனச்
சமைந்த ஞானத் தாமரையை,
எந்தப் பாதம் அலர்த்திடுமோ,
எது அம்மலரின் மாமாயக்
கந்தம் தூவிக் காலமெலாம்
காற்றை வெறியில் ஆழ்த்திடுமோ,
அந்தப் பாதந் தனை என்தன்
ஆகம் தொட்டு நிறைந்திடுக.

கட்டுக் கடங்கா அணுக்களும் உன்
கால நடனத் தாளத்தில்
ஒட்டி நின்றே வடிவத்தில்
ஒடுங்கும், உயர்வான் பெருவெளியை

முட்டிக் கதிரும், கோளும், ஒளி
முட்டும் வீரக் கழலாகத்
தொட்டுன் பாதம், நீ சுழலும்
சூழ்ச்சியோடு சுழன்று செலும்.

ஊழி தோறும் பொருளெல்லாம்
உறக்கம் நீத்துக் கண்விழித்து,
சூழும் துயர வழி தொட்டுத்
துரியம் நோக்கி நடந்து செலும்.
ஆழும் இன்ப துன்ப மெனும்
அலைகள் அரற்றி மோதிடுமோர்
ஆழியாம் உன் ஆனந்தம்
அகிலமெங்கும் பொங்கிவரும்.

தேனில் இனிய இளமை யெழிற்
சிரிப்பும், முதுமைத் துயர் தோய்ந்த
தீன விழியின் கண்ணீரும்
சேர்ந்த வண்ணம் உனதன்றோ?
ஆறு அந்த வண்ணத்தின்
அடையாளத்தை மறைவாக
நானிங்கிருந்து போவதன் முன்
என்தன் நெஞ்சில் தீட்டிவிடு.

சிந்தை தன்னில், செயல் தன்னில்,
சிறிய வாழ்வில் நான் ஏற்றும்
அந்தி விளக்கின் சுடரில், இருள்
அடர்ந்த யாம வேளையிலே,

குந்தி யிருந்து நான் காணும்
குருட்டு விழிப்பில், உன் வண்ணம்
வந்து படிந்தென் உயிரையெலாம்
வாரி உனதாய் வழங்கிடுக.

உருண்டுருண்டு நிமிர் அசைவின்
உலையா நிலையாம் உன் பாதம்,
இருண்ட இரவில் தாரகையை
எழுப்பி ஆடும்; குகைச் சிறையில்
சுருண்டு கிடக்கும் அருவியினைத்
தொட்டெழுப்பிச் சுழற்றிவிடும்;
திரண்ட மேகம், இடித்து, மழை
சிதறும் மாரிக் குரலாகும்.

துடியாய்த் துடித்துச் சுழல்கின்ற
தொல்லை வாழ்வின் மையத்தில்,
முடியா அசைவுச் சுருளாக
மூளும் கதியின் விதியாக,
நடமாடி வரும் நாயகனே,
நானிங்கிருந்து போகுமுன், உன்
அடியோடு எனது நெஞ்சு ஒன்றி
ஆரத்துடிக்க அருளாயோ?

## 81

'இயேசு கிறிஸ்துவைச் சிலுவையில் அறைந்தவர்கள் இன்றும் நம்மிடையே வாழ்கிருர்கள். தாங்கமாட்டாமல் கிறிஸ்து நாதர் கதறுகிருர்.'

ஆளும் அரசின் பெயரால் அவனை
அன்று சிலுவையில் அறைந் தவரே,
மீள வந்து பிறந்தனர் இங்கு,
மேவுகிருர் அவர் நம்மிடையே.

கோவில் தனிலே கூடிப் பக்திக்
கோலம் பூண்டே பாடிடுவார்;
கூவி அழைத்துப் படைகள் திரட்டிக்
'கொல்' என நின்று குமுறிடுவார்.

துதிகள் பாடித் தொழுகை புரிவார்,
தோத்திர இசையின் இடை இடையே,
கதித்துப் பேய்போல் ஆடிக் கத்தி
கத்திக் கொடுமை கலந்திடுவார்.

நாசக் கசப்பு நஞ்சு நிறைந்த
நாற்றக் கலம் இதை, 'ஆண்டவனே,
வீசி எறி,' என வேண்டுகிருன், துன்ப
வேதனை தாங்கா மனுமகனும்.

## 82

'என் வாழ்வு என்ற சிறு மலரை, அது வாடுவதற்கு முன், நீயாகவே வந்து பறித்து ஏற்றுக்கொள்.'

இந்தச் சிறிய மலர் கொய்தே,
ஏற்பாய், காலம் தாழ்த்தாதே.
சிந்தும், வாடிப் புழுதியிலே
சிதைந்து போம் என்று அஞ்சுகிறேன்.
உன்தன் மாலைக்கு அணி செய்ய
உதவாது எனினும், இம்மலரை
வந்து பறித்து அவ் வேதனையால்,
வடிவு வழங்கி அணைத்திடுவாய்.

உன்னை உணர்ந்து, நிவேதனமாய்
உனக்கு இம் மலரை அளித்திடலாம்
என்னில், அதற்குள், பொழுது மலை
ஏறிப் போம் என்று அஞ்சுகிறேன்.
வன்னம் வெளுத்து வாசம் போய்
வதங்கு மலரே ஆயிடினும்,
இன்னும் நேரம் உளபோழ்தே,
இறைவா, இதையும் ஏற்றிடுவாய்!

## 83

'என்னை நோக்கி, இறைவன் வருகிறான், வந்துகொண்டிருக்கிறான். உள்ளும் புறமும், எங்கும், எங்கும், எங்கணும்.'

வருகிறான், வருகிறான், வருகிறான்.
அரவமின்றி ஆர்பதத்தின்
அசைவு கேட்கவில்லையா?
வருகிறான், வருகிறான், வருகிறான்.

ஓடுகின்ற ஓர் கணத்தில்,
ஓங்குகின்ற ஊழியில்,
ஆடுகின்ற பகலில், அந்த
காரம் ஆழும் இரவினில்,
வருகிறான், வருகிறான், வருகிறான்.

கோடை வெய்யில் வாசம் மல்கும்
கோலக் காட்டுப் பாதையில்,
மூடு கார் இராவினில்,
முழங்கு மேகத் தேரினில்,
வருகிறான், வருகிறான், வருகிறான்.

பண்ணிலே இசைத்துளேன் என்
பாவனைகள் ஆயிரம்;
பண்ணில் ஆடும் இசைகள் கூடிப்
பாடும் செய்தி ஒன்றுதான்:
வருகிறான், வருகிறான், வருகிறான்.

துன்பம் மேலோர் துன்பமாகத்
துன்னும் போது என் நெஞ்சினில்,
மன்னி நின்றழுத்தும் பாரம்
மாறிலா அவன் பதம்.
வருகிருன், வருகிருன், வருகிருன்.

எந்தை பொற்பதங்கள் என்னும்
இன்பவேதி தீண்டலால்
என்தன் இன்பம் யாவும் சோபை
ஏறும், ஏறும், ஏறுமே.
வருகிருன், வருகிருன், வருகிருன்.

## 84

'இறைவனே, ' அகிலாண்ட கோடி ' என்னும் இசையைப் படைத்த நீ, என்னையும் பாடு என்கிருயே? இருக்கட்டும், உன்னுடைய பாணன் என்ற இந்த உரிமையைக் கொண்டே உன்னைத் தொட்டுவிட மாட்டேனு?'

என்னையும் பாடெனப் பணிக்கிருய், இது நினைந்து
ஏறிடும் பரவசத்தில்
என்னுளம் விம்மிடும், உன்முகம் நோக்குவேன்,
ஏழை என் விழி பெருகிடும்;
என்னுளே ஓலமாய் ஓங்கிடும் ஒலியெலாம்
இசைந்து பண்ணுக மலரும்.
மன்னிய களிப்பொடு மறிகடல் தாவுமோர்
மாச்சிறைப் பறவையென்ன,

உன்னை நான் பரவிடும் பண்ணெலி சிறைவிரித்து
உலகெலாம் பறந்துலாவும்.
என்னிசை தனிலும் நீ பெறுகிருய் இன்பமென்று
ஏழையேன் அறிகிலேனே?
உன்முனே நான்வர வகுத்ததும், பாணனுய்
உள்ள என் உரிமையன்ருே?
என்னவோ ஏகமாய் எங்கணும் விரியும் என்
இசைச்சிறை அருகு வீசி,

உன்னையும் தொட்டுளம் துள்ளுவேன், மற்றுநான்,
உன்பதம் தொட இயலுமோ?
இன்னிசை வெறியெனும் மதுவினை மாந்தியே,
எல்லையில் பரவசத்தில்,

என்னை இழந்து நான் உன்னை இங்கு அணுகுவேன்,
உறவு கொண்டாடி நிற்பேன்;
என்னையும் பொருளெனப் பணிகொளும் உன்னையும்,
இறைவனே, தோழன் என்பேன்.

## 85

'என் உடல், அறிவு, உள்ளம், ஆற்றல், அனைத்தும் உன் அருள். ஆகவே என் கடமை என்ன? தெரியும், ஐயனே.'

என்தன் உயிருக்கு உயிர்ப்பொருளே,
என்தன் அங்கம் அனைத்திலுமே
உன்தன் கரம் தொட்டு உயிர் அளிக்கும்
உண்மை அறிவேன்; அதனாலே
என்தன் உடலைத் தூய்மையதாய்
என்றும் காக்க முயன்றிடுவேன்.

என்தன் அறிவின் உள்ளொளியாய்
இருக்கும் உண்மை நீ என்றே
சிந்தை தெளிந்தேன்; அதனால் என்
சித்தம் தன்னில் பொய் ஒன்றும்
எந்த நாளும் வாராமல்
இருக்க யானும் முயன்றிடுவேன்.

என்தன் இதயக் கோயிலிலே
இருப்பாய் நீ என்று அறிவதனால்,
எந்தத் தீதும் அங்கு வராது
ஏற்றி விரட்டி, என்றென்றும்
என்தன் அன்பு மலரொன்றே
இசைய யானும் முயன்றிடுவேன்.

என்தன் திறல் என்று ஒன்றுளதோ?
　　எல்லாம் உன்தன் அருளன்றே?
இந்த உண்மை உணர்வதனுல்
　　இங்கு என் செயல்கள் அனைத்திலுமே,
உன்தன் பெருமை ஒளிவீசி
　　ஓங்க நாளும் முயன்றிடுவேன்.

'இறைவனே, உன் முகம் காணவில்லை என்றால் அமைதி ஏது? அதைக் காட்டவே இந்த இளவேனில் வந்ததா?'

உன்னருகு அமர்ந்து நான் உலகினை மறக்கவே
    ஒரு கணம் வேண்டும், ஐயா.
பின்னர் இங்குள்ள என் பணிகளை ஆற்றுவேன்,
    பேதையேன் உனைப்பிரிந்தே,
உன் முகம் பார்க்கவும் இல்லையெனில், என்னுளம்
    ஓய்வினைப் பெறுவதேது?
என் நிலை கரையிலா இடர்க்கடல் நடுவிலோர்
    இடர் அலை ஆகும், ஐயா.

இன்று இதோ வாசலில் உயிர்த்தது வசந்தமும்
    இனியவாம் மழலை பேசி;
இன்அலர்ச் சோலையாம் மன்றுளே மதுகரம்
    இசைத்தன மதுர கீதம்;
ஒன்றிஓர் மோனமாய்ப் பெருகிடும் ஓய்வினில்
    உன்முகத்து அமைதி காணும்
இன்றுதான் வாழ்க்கையை அர்ப்பணித்து உனது அடி
    இணையிலே வைக்கும் நேரம்.

## 87

‘இறைவா, இந்த ஏழைப் பாணனை எப்படியோ உன் இசையால் மயக்கி விட்டாயே!’

எந்த வண்ணம் பாடுகிறாய்,
இறைவா, அறியேன், என்றென்றும்
முந்து மோனப் பெரு வியப்பில்
முழுகி இருந்து கேட்டிடுவேன்.
உன்தன் இசையாம் ஒளி பொங்கி
உலக முழுதும் சுடரும்; அதன்
விந்தை மூச்சோ வெளிதுழவி
விண்ணில் இருந்து விண் தாவும்.

உன்தன் பாடல் ஒலிக் கங்கை
உருவி இடராம் மலையை, அவை
சிந்தப் பாயும். உன்னுடனே
சேர்ந்து பாடத் துடிக்கின்றேன்.
என்தன் குரலோ சுதி விலகி,
ஏமாற்றத்தில் உடைந்து விடும்,
அந்தம் இலா உன் இசை வலையில்,
ஐயா, என்னைச் சிறைவைத்தாய்!

## 88

இறைவன் எங்கே, விடுதலை எங்கே? கோயிலிலா, பூஜையிலா, ஏகாந்தத்திலா? இல்லை. பிறகு? உழைப்பினில், வேர்வையில், புழுதியில், மக்கள் மத்தியில்.

யாரடா, மந்திரம் முணுமுணுத்தே ஜப
மாலையை உருட்டுகின்றாய்?
கார்இருட் கோயிலின் தனிமைஓர் மூலையில்,
கதவெலாம் அடைத்த வண்ணம்
யாரைநீ தேடுவாய்? அறிவையோ, சொல்லடா.
ஐய, நீ கண்விழித்துப்
பாரடா, அங்கில்லை, நாளும்நீ தேடிடும்
பகவன் அங்கில்லை என்றே.

ஏர்பிடித்து இரும்புநேர் இடத்தினைத் திருத்தும் ஓர்
ஏழையின் அருகில் உள்ளான்.
ஊர்வெளிப் பாதையில் கல்லுடைத்து அயரும் ஓர்
உழைப்பவன் நிழலில் உள்ளான்.
மாரியிற் கோடையில் அவருடன் இருந்து தன்
மணிக்கரம் புழுதி தோய்த்தான்.
போர்வையாய் உள்ள உன் பூசுரம் வீசடா,
புழுதியில் இறங்கி வாடா.

விடுதலை, விடுதலை, விடுதலை என்கிறாய்
விடுதலை காண்பது எங்கே?
விடுதலைக்கு ஒருவனும் இறைவனும் படைப்பு எனும்
விஞ்சையில் தனைப்பிணித்தே

முடிவிலாச் சராசரம் அனைத்தையும் கட்டும் ஓர்
 முட்டினில் உவந்து நின்றான்.
நெடுகிலும், காலநதி நீளும் அந் தம்வரை
 நேர்ந்தனன் நமது பந்தம்.

பூவும், மென் சாந்தமும், தீபமும், தூபமும்,
 பூஜையும் விட்டு வாடா!
மேவும் உன் தியான வெம் சிறையினை விடுவிடு,
 மேதினி வெளியில் வாடா!
ஆவதும் ஏதடா, உன்னுடைய கந்தலாய்,
 அழுக்கினில் அழிந்து போனால்?
தேவனே உழைப்பினில் வேர்வையில் மூழ்கினான்,
 சேர வா, சேர வாடா!

## 89

'உலகச் சந்தையிலே, ஓடுகிறார்கள், சாடுகிறார்கள், நானோ? சும்மா இருக்கிறேன். இதற்காக ஏசுகிறார்கள். அவர்களுக்குத் தெரியுமா, என்னை அர்ப்பணிக்கக் காத்திருக்கிறேன் என்று?'

என்னை அவன் கையினிலே ஒப்படைக்கவே—அன்பும்
என்று வரும் என்று நானும் காத்திருக்கிறேன்.
என்னென்னவோ செய்ய நான் மறந்து சோர்கிறேன்-நேரம்
ஏகமாய்க் கழிந்த தெண்ணி ஏங்கி நிற்கிறேன்.

சாத்திரங்கள் கோடி பேசி வீசிச்செல்கிறார்—என்னைச்
சங்கிலியாற் கட்டுகின்ற சட்டம் சொல்கிறார்.
ஆத்திரக் காரர் இவர் கைக்ககப்படேன்—அவன்
அன்புவரும் என்று நம்பிக் காத்திருக்கிறேன்.

ஒன்றையுமே சட்டை இவள் செய்கிறதில்லை—என
ஊரிற்கூடிக் கூடி என்னை ஏசிக் கொட்டுவார்,
நின்று நின்று தூற்றும் அவர் நிந்தனையெல்லாம்—முற்றும்
நீதமடீ, ஆயின் இன்னும் காத்திருக்கிறேன்.

சந்தைநாளும் ஓய்ந்ததென்னைக் கூட்டிச்செல்லவே—
காத்துக் காத்துச் சலித்தவரும் கைவிட்டே சென்றார்.
அந்தி வரும் போதில் அவன் அன்பு அலர்ந்திடும்—என்ற
ஆசையடீ, எனை அளிக்கக் காத்திருக்கிறேன்.

## 90

'பகலிலே, எத்தனையோ பேருடன் கூடிக் கூடி, எப்படியோ பொழுது கழிந்தது. இப்போது காரிருள் இரவு, தனிமை; இறைவனே, கை விடாதே.'

வானத்திலே கரு மேகம் திரண்டன,
 வந்து செறிந்தது காரிருளும்.
ஏனோ, அன்ப, உன் வாசலிலே இந்த
 ஏழையைக் காத்துக் கிடக்க விட்டாய்?

என்தன் பொறியைத் தொலைத்திட நண்பகற்
 போதில் எல்லோருடன் கூடி நின்றேன்;
இந்த மழைக்கால் இருட்டினில் உன்னையே
 எண்ணி நிற்பேன்; உனை நண்ணி நிற்பேன்.

உன்முகம் காட்ட மறுத்துவிட்டால், என்னை
 ஒட்டக் கை விட்டே ஒதுக்கிவிட்டால்,
என்ன செய்வேன், இந்த நீண்ட மழை நாளை
 எப்படி நானும் கழித்திடுவேன்?

துன்னும் இருள் தோயும் வானத் தொலைவினில்
 தோயும் என்தன் விழி; சஞ்சலத்தில்
மன்னிய என்உளம் மாருதம் தன்னொடு
 மாழ்கி அரற்றி அலைந்திடுமே.

## 91

'இறைவனே, என்னேடு பேச மாட்டாயா? இரு, இரு, காத்திருப்பேன், என்ருவது இருள் மறையும். இசை பெருகும்.'

என்னேடு எதுவும் பேசாமல்
இருப்பாய் எனில், உன் மோனத்தால்
என்தன் நெஞ்சு நிரப்பிடுவேன்,
ஏற்பேன் அதனைப் பொறுமையுடன்.
மின்னும் உதயம் வருமென்றே
மீனத்து ஒளியில் அசையாமல்
நின்று, தவத்தில் தலை தாழ்த்தும்
நீண்ட பொறுமை இரவைப்போல்,

என்றும் இருப்பேன். காலை வரும்
இருளும் மறையும், ஆம், உறுதி.
உன்தன் குரலும் வான் உருவி
ஒளிப் பொன் ஆருய் ஓடி வரும்.
என்தன் சிறிய புட்கூட்டில்
எழுந்து உன் பாடல் சிறை வீசும்.
பொன்ரு மலராய் வடிவெடுத்து, என்
பூங்கா தனில் உன் இசை பூக்கும்.

'இங்கே ஏன் வந்தேனே, அந்தப்பணி முற்றுப் பெறவில்லை. என் பாட்டைப் பாடியாக வில்லை. அவனைக் காணவும் இல்லை. என்னைச் சுற்றி சுற்றி வருகிறுன், தெரிகிறது. என் மனம் எப் போது மலரும் என்று காத்திருக்கிறுன். என்ருவது அவனைச் சந்திப்பேன். ஆனுல்...இன்னும் தருணம் வரவில்லை.'

பாடவந்த பாட்டை இன்னும் பாடவில்லை,
பகலெல்லாம் வீணையினைப் பார்த்துப் பார்த்து,
கூடாத தந்தியினைக் கூட்டிக் கூட்டிக்
குந்தி இங்கே வெறும் பொழுது போக்கி நின்றேன்.
தேடி நின்ற தாளமெல்லாம் கூளமாச்சு;
தேர்ந்து வைத்த சொல்லெல்லாம் சிதறிப் போச்சு;
ஓடி நெஞ்சில் வேதனையாய் ஓங்கும் ஆசை
ஒன்று மட்டும் எனை உறுத்தி உண்ணலாச்சு.

இன்னும் மலர் விரியவில்லை, காற்றுமட்டும்
ஏங்கி அஃதைச் சுற்றிவரும், விம்மிச் சோரும்.
இன்னும் அவன் முகத்தினை நான் காணவில்லை,
இன்னும் அவன் குரலினை நான் கேட்கவில்லை.
என்ருலும், என் வீட்டு வாசல் முன்னே
ஏகும் ஒரு நெடுஞ்சாலை மீதில், எங்கும்
மென்மையாய் அவன் நடந்து செல்லும் ஓசை
மெல்ல வரும் என் காது தனிலும் வீழும்.

வந்தால் இத் தரையில் அவன் இருக்க வேண்டி,
வண்ண விரிப்பு எடுத்தெடுத்துப் போட்டுப் போட்டு,
இந்த நெடும் பகற் பொழுதைப் போக்கி விட்டேன்;
என் விளக்கை ஏற்றமட்டும் மறந்தே போனேன்.
அந்தி இருள் சூழலாச்சு; இங்கவனை வீட்டில்
அழைப்பதற்கு வழியில்லை. ஆனால், என்றோ
சந்திப்பேன் அவனையென, உயிரை ஏதோ
தாங்கி நிற்பேன், சந்திக்கும் தருணம் காணேன்.

## 93

‘ இறைவனே, உன் பாணன் இவனுக்கு உன் மண்டபத்தில் ஒரு மூலையை அருளி இருக்கிருய். என்று இவனை அழைக்கப் போகிருய்? என்று ‘ பாடு ’ என்று கட்டளையிடப் போகிருய்?’

இங்குளேன் இறைவனே, உனக்கு இசைகள் பாடவே,
இம் மகா மண்டபத்தில்,
தங்கவே எனக்கும் ஒரு தனிமூலை உள்ளது, உன்
தயவினுல் அங்கு நிற்பேன்.
இங்கிந்த உலகினில் வேறு பணி எனக்கொன்றும்
இல்லை. என் வெற்று வாழ்க்கை
பொங்கி ஒரு நோக்கமும் இல்லாத பண்களாய்ப்
போவதே புரியும், ஐயா.

எங்கும் இருள் கவிகின்ற நிசியெனும் கோயிலில்
இறைவ, உன் பூஜை நிகழும்.
அங்கு அந்த வேளையில் உனதுமுன் பாடிட
ஆணை நீ அருளுவாயோ?
தங்கயாழ் மீட்டொலி காற்றினில் தவழ்ந்திடும்
தண் உதய வேளை தனிலும்
‘ இங்கு வா ’ என்று நீ ஆணை தந்து என் பெருமை
ஏற்ற நீ கருதுவாயோ?

## 94

'அவன் வந்தான். வந்ததை உணராமல், பாழும் உறக்கத்திலே அழுந்தி விட்டேன். என்ன செய்வேன்?'

வந்தும் பயன் என்னடி—அவன்
வந்தும் பயன் என்னடி?
என்தனைத் தொட்டு அருகில்—அவன்
இருந்தும் பயன் என்னடி?

ஊரும் அடங்கியபின்—இரவும்
ஊமையாய்ப் போனதன் பின்,
யாரும் அறியாமல்—இங்கே
யாழொடு வந்து நின்றான்.

விந்தை இசை உதிர்த்த—அந்த
வீணைக் குரல் ஒலியும்,
என்தன் கனவுகளில்—இசை
ஏற்றி நிறைத்ததடி.

பாழும் உறக்கத்திலே—அழுந்தி,
பக்கத்தில் வந்தவனை,
ஏழை இழந்தேனடி—இனி
என்னதான் செய்வேனடி?

என்தன் இரவுகளும்—ஐயோ,
இப்படி வீணாகச்
சிந்திட வேண்டுமோடி—இதற்குச்
செய்வதும் என்னவோடி?

என்தன் உறக்கத்தைத் தன்—உயிர்ப்பால்
எட்டித் தொடும் அவனை,
இந்த இப் பாவி, ஐயோ—கண்ணால்
ஏனடி காணவில்லை?

## 95

'உன்னைக் காணத் தனியாகத்தான் வந்தேன், ஆனால், ஆண்டவனே, என் சிறுமை நிழல் என்னோடு விடாமல் வருகிறதே! உன் வாசலுக்கு எப்படி வருவேன்?'

உன்னைக் காண நடக்கலானேன்,
ஒருவா, தனியாக;
என்னைவிடாது தொடர்வான் ஒருவன்
யாரோ இரவிருளில்.

அவனை விலக்க, விலகி விலகி
அலந்தேன், வழியில்லை.
அவனோ திமிர்ந்து நிமிர்ந்து தொடர்வான்,
அதிர்ந்த பெரு நடையில்.

தரையில் புழுதி எழுந்து சுழலத்
தருக்கி நடக்கின்றான்;
உரையை மறித்து என் சொல் ஒவ்வொன்றின்
ஓங்கி இரைகின்றான்.

அவன் என் சிறுமை வடிவம், மானம்
அவனுக்கு ஏதும் இல்லை.
அவனோடு உன்தன் வாசல் வர; நான்
ஐயா, கூசுகிறேன்.

## 96

'உன்னை வேண்டுவதெல்லாம் இதுதான். இறைவனே! என் சிறுமையைப் போக்கி விடு.'

என்னரசே, உன்னை வேண்டுகிறேன், உள்ளே
என்னிதயந் தன்னில் மண்டி யெழும்
சின்னத்தனத்தை, வறுமையை, வேரோடு
சீறி மிதித்துச் சிதைத்து விடு.

இன்ப துன்பங்களை எண்ணி மலையாமல்
ஏற்கும் வலிமை வழங்கிவிடு.
அன்பினை உன்பணி ஆற்றிக் கனிவிக்கும்
ஆற்றல் எனக்கும் அருளிவிடு.

ஏழையர் என் வாசல் தேடி வந்தால், யாரோ
ஏதலர் என்று விலக்காமல்,
பாழி வலிமை ஆணவத்து ஆழ்கின்ற
பாவியர் தம்மைப் பணியாமல்,

என்றும் இருக்க உதவிவிடு, அற்பம்
எண்ணுமல் என் மனம் ஏற விடு.
அன்புடன் சித்தத்தை உன்தன் அடைக்கலம்
ஆக்கும் திறலை அருளிவிடு.

## 97

'துறவுப் பாதையில் நடக்கமுடியாமல் சோர்ந்து, ஆசா பாசங்களில் விழுந்த என்னையும், இங்கேயே வந்து காப்பாற்றினாயே!'

காலையின் மோனக் கடலிலே திரையாய்க்
கலித்தன பறவையின் கானம்;
சாலையின் மருங்கில் சதிர்நடம் பயின்று
தழைத்துளம் களித்தன மலர்கள்;
நீலமா முகிலின் பிளவுகளூடே
நிறைந்த பொன் சிதறின கதிர்கள்;
கோலமாம் இவற்றில் ஒன்றையும் குறியோம்,
கூடினோம், நெடு வழி நடந்தோம்.

பாடலை விடுத்தோம், பாடியே ஆடிப்
பரிவுடன் மகிழ்வதும் மறந்தோம்.
கூடியே ஊருட் சென்று உள பொருளைக்
கொள்வதும் கொடுப்பதும் துறந்தோம்.
ஓடினோம், ஒருசொல் உரைப்பதும் தவிர்ந்தோம்,
ஒரு கணம் தயங்கவும் மறுத்தோம்.
நீடிய பொழுதின் விரைவொடு விரைந்தோம்,
நீள் நெறி கடுகியே நடந்தோம்.

வானிலே உச்சிக்கு எழுந்தனன் கதிரோன்,
வனப்புறு முனகின நிழலில்.
வேனிலின் மூச்சாய் விசிறிய காற்றில்
விரைந்தன சுழன்றன சருகு.

கானிலோர் ஆடு மேய்த்திடும் சிறுவன்
கனவு கண்டு உறங்கியே விழுந்து
நீள்நிழல் ஆலின் அடியிலே கிடந்தான்,
நிமிர்ந்தது நண்பகல் வெம்மை.

ஓடையின் அருகே ஒளிர்ந்த புல்-திடலில்
ஓய்ந்த என் உடலினைச் சாய்த்தேன்.
கூடிஎன் னுடனே வந்தவர் இதனைக்
குறித்தெனை எள்ளியே நகைத்தார்;
ஓடினூர், நிமிர்ந்த தோளொடு விரைந்தார்,
ஓய்விலார், திரும்பியும் பாரார்;
நீடிய தொலைவில் ஆடிய கானல்
நீலவான் மங்கலில் மறைந்தார்.

பழியெனை உறுத்தப் படரினிற் கிடந்தேன்,
பரிபவம் விடுத்தெழ முயன்றேன்;
எழுவதற்கு அய்யோ, இயன்றிடாது ஓய்ந்தேன்;
இங்கிதென் தலைவிதி, முழுதும்
அழிவதே முடிவு என்று என்பரம் துறந்தேன்;
அழுந்தினேன் களிப்புடன் இழிவில்;
ஒழிவிலாத் தோல்வி உணர்வினில் நிழலாய்
ஓடிய இன்பமும் உணர்ந்தேன்.

குன்றமும், புறவும், மருதமும் கடந்தார்,
குறுகினூர் வியன் புது நாடு;
சென்றனர், எவரும் சென்று கண் காணுச்
சேண் உள பெருநிலம் சேர்ந்தார்;

‘வென்றியும் உமதே, வீரராய் நெறியில்
விரைந்த பேர் இசையெலாம் உமதே’
என்று நான் அவரை வாழ்த்தினேன், வாழ்த்தி,
என்நிலை அவலமும் உணர்ந்தேன்.

பொன் வெயிற் சரிகை இழைப்பசும் இருளின்
புரையிலா அமைதி வந்து, என்தன்
நெஞ்சிலே படர, எதனை நான் தேடி
நடந்தனன் என்பது மறந்தேன்.
முன்பு நான் ஏற்ற முனைப்பெலாம் விடுத்தேன்;
மூண்டெழு பாடலும் நிழலும்
பின்னும் இம் மாயச் சுழலிலே உளத்தைப்
பேதையேன் சரணென அடைத்தேன்.

உன்னை வந்தடைய நடந்திடும் பாதை
ஓய்வொழிவு இல்லதாய் நீளும்
என்று நான் அஞ்சி, உன்னை வந்தடைதல்
என் செயல் கடந்த தென்று அயர்ந்தேன்.
இன்று நான் கண்ணை விழிக்குமுன் இங்கே
என் துயில் இருளெலாம் நிறைய,
உன்னொளி முறுவல் பெருகிட, என்முன்
ஒருவனே, வந்து நீ நின்றாய்.

98

கடவுள் இந்தக் கூட்டிலும் இருக்கிருன். அது கடந்த வெளியிலும் இருக்கிருன். எப்படி?

நீயே வானம், நீயே கூடு,
நீங்கா வடிவே, இக் கூட்டில்
ஓயா மணமாய், நிறமாய், ஒலியாய்,
உயிரை அணைப்பது உன்னருளே.

காலே வருவாள் இங்கே கனகக்
கலமொன்று ஏந்தி, அழகென்னும்
மாலே கொணர்வாள், கொணர்ந்து மண்ணின்
மகுடமாகச் சூட்டிடுவாள்.

மந்தை துறந்து வெறித்த மேய்ச்சற்
காட்டு வெளியின் நெடுமேட்டில்,
எந்தச் சுவடும் இல்லா வழியில்
ஏறி வருவாள் அந்தி மகள்.

எங்கோ ஓய்வெனும் மேலேக் கடலில்
இருந்து இங்கு அமைதி எனும் அமுதை,
தங்கக் குடத்தில் ஏந்தி வருவாள்,
தண்ணென் றளிப்பாள் அந்திமகள்.

ஆனல் இந்தக் கூட்டிற்கு அப்பால்
ஆன்மா சிறகு விரிக்கின்ற
ஆரு அகண்ட வான வெளியில்
ஆட்சி செலுத்தும் வெண்மை ஒளி.

களங்க மில்லா அப்பே ரொளியில்
கங்குல் இல்லை, பகல் இல்லை;
துளங்கு நிறமோ வடிவோ, இல்லை,
சொல்லும் இல்லை, நீ உண்டு.

## 99

'என்னையே பார்த்துப் பார்த்துக் குருடானேன். உன்னைக் காணவில்லை. இதுவா உன் மாயை? ஏன், ஐயனே, இப்படி என்னோடு ஓயாத கண்ணும்பூச்சி ஆடுகிறாய்?'

என்னை ஏதோ பெரிதாக
    எண்ணி, மயங்கி, நாற்புறமும்
என்னை வீசி, நாளெல்லாம்
    எனையே பார்த்துக் களிக்கின்றேன்.
உன்தன் ஒளியின் மேலும், இருள்
    ஓடும் வண்ணம் புரிகின்றேன்,
என்தன் பெருமை உனை மறைக்கும்
    இதுவே, இறைவா, உன் மாயை.

உன்னை நீயே இரண்டாக்கி
    ஊடே சுவரும் வைக்கின்றாய்;
உன்னிற் பிரித்து நீ நிறுத்தும்
    உனையே தேடி அலைகின்றாய்;
உன்னிற் பிரிந்து நீயேதான்
    உருவம் கொண்டாய் நானாக;
என்னைப் பின்னர் இசை கோடி
    எடுத்துப் பாடி அழைக்கின்றாய்.

சிந்தி வண்ணக் கண்ணீராய்
    சிரிப்பாய், பயமாய், ஆசையதாய்,
இந்தப் பிரிவின் ஏக்கந் தான்
    எதிரொலிக்கும் வானத்தில்;

முந்தும் அலையாய் மூண்டு உயரும்;
முறிந்த கனவாய் முடிந்தயரும்.
இந்தத் தோல்விப் பெருமையைத்தான்
இறைவா, என்ருற் பெறுகின்ருய்.

எனக்கும் உனக்கும் இடையே நீ
எடுத்த திரைமேல், எத்தனையோ
கணக்கில் லாத கோலமிடும்,
கங்குல் பகலாம் தூரிகைகள்.
மனத்தில் ஓடும் நேர் கோட்டு
மலட்டைக் கடந்து இத்திரைக் கப்பால்
உனக்கென்று அமைந்த ஒளிப்பீடம்
ஓங்கும் மாய வளைவாக.

நீயும் நானும் ஆன இந்த
நீளும் காட்சி, வான் நிறைக்கும்;
நீயும் நானும் ஆன இசை
நிமிர்ந்து காற்றின் உயிராகும்;
நீயும் நானும் ஒளிந்தொளிந்து
நின்று தேடி விளையாடும்
ஓயாக் கண்ணும் பூச்சியிலே
உலவாக் காலம் ஓடி விடும்.

100

'உன்னை அறிந்ததாகப் பாடினேன். 'என்ன அறிந்தாய்?' என்றால் விடையளிக்க முடியவில்லை. உலகம் என்னைப் பார்த்து நகைக்கிறது. நீயோ முறுவலுடன் அமைகிறாய்.'

உன்னை அறிந்தேன் என இந்த ஊர் முழுதும்
என்னவோ பாடி இறுமாந்தேன். என் பாட்டில்,
உன்தன் வடிவத்தைக் காண்பார் பலர் என்பால்
வந்து நிற்பார், 'யார் அவன் சொல்?' என்று
வினவிடுவார்.
ஏதும் பதில் அளிக்க மாட்டாமல், 'உண்மையிலே
யாதும் சொல அறியேன்,' என்பேன். எனை எள்ளி,
'பொய்யா உன் பாடல் புரட்டா?' எனப் போவார்.
ஐயனே, நீயோ அமைவாய் முறுவலுடன்.

நெஞ்சில் உனைப்பற்றி நீண்ட இரகசியங்கள்
விஞ்சிப் பெருகும் அந்த விஞ்சையிலே, ஏதேதோ
கற்பனையும் கட்டுக் கதையும், அழியாத
சொற்களிலே பாடிவைப்பேன். சொல்லின்
பொருள் முழுதும்
என்ன வென்று கேட்பார். இதற்கென்ன
செய்திடுவேன்?
'என்ன பொருளென்று யாரறிவார்?' என்றுரைத்தால்
நையாண்டி பேசி நகைத்தவரும் போகின்றார்.
ஐயனே, நீயோ அமைவாய் முறுவலுடன்.

# 101

'முழுதும் என்னுடையது என்று நான் உரிமை பாராட்டக் கூடிய பொருள் என் துயரக் கண்ணீர்தான். அந்தக் கண்ணீரால் உனக்கு ஒரு மாலை கட்டிப் போடுகிறேன். ஏற்றருள், தாயே!'

தாயே, துயரக் கண்ணீரால்
சமைப்பேன் உனக்கோர் முத்தாரம்.
மேய விண்மீன் உன் பதத்தில்
மின்னிப் புரளும் ஒளிச் சிலம்பாய்;
ஆயின், என்தன் சிறு கையால்
அமைக்கும் துயர மாலைதான்
தாயே, நீ உன் நெஞ்சினிலே
தாங்கும் மாலை, தனிமாலை.

பொருளாம் அனைத்தும், புகழ் அனைத்தும்,
பொங்கி வருவது உன் கருணை.
தருவாய் பொருளைப் புகழை நீ
தாரா திருப்பாய், உன் சித்தம்.
உரிமை எனக்கே உள துயரை
உனக்கே உரிய நிவேதனமாய்த்
தருவேன், தந்தால் தாராயோ,
தாயே, உனது தனியருளை?

## 102

'உன்னையே உன்னால் தூக்கமுடியுமா? இல்லை, அப்பனே, விட்டுவிடு. உன் ஆணவத்தை, ஆசையை, விடு. அவன் கருணை போதாதா?'

உன்தோளில் உன்னையே தூக்கமுயல் பேதையே,
உன்வீட்டு வாசல் வந்தே,
உன்னையே நோக்கி இரு கையேந்திப் பிச்சையென
உழல்கின்ற ஏழையே, கேள்.
உன்பாரம் அத்தனையும் அவன்பாரம் என்றுவிடு,
ஒருகவலை இல்லாதிரு.
உன்பாரம் உலகத்தின் பாரங்கள் யாவும் அவன்
ஒருவனே தாங்க வல்லான்.

உன் ஆசைப் பேய்மூச்சு விட்டதும் விளக்கிலே
ஒளிச்சுடர் அவிந்து போகும்.
உன் ஆசை இறைவன்உளம் உணராத ஊன்காட்டில்
ஊறிவரும் ஊத்தை ஆகும்.
உன் ஆசை மாசுற்ற கையினால் எதனையும்
ஒருபோதும் பற்றிடாதே.
எந்நாளும் அவன் கருணை அருள்வதே போதும்என
இருக்க நீ மறந்திடாதே.

## 103

'ஒன்றுமற்றவனுக இங்கே வந்தேன். ஆனுல் நீ தந்த உலகப் பொருள்களில் இன்பம் நாடி, உன்னே மறக்கிறேன். இறைவனே, இதைக் காண்பதா உன் இன்பம்?'

உன்தன் உலகிம் மண்ணுலகில்
ஒருவா, வந்தேன் திகம்பரமாய்;
ஒன்றும் இலேயே என அழுதேன்,
ஒரு நாள் கூட ஆகவில்லே.
இன்ருே என்தன் குரல் தன்னில்
இன்பம் பேசும். இவ்வுலகால்
என்னே நிரப்பத் தாஞே நீ
எங்கோ ஒதுங்கி நிற்கின்ருய்?

உன்ன தென்றே என் பாடல்
ஓங்கும் போதும், மனிதர் எனே
அன்பாய்ப் போற்றிப் புகழாரா
என்னும் ஆசை நிழலாடும்.
என்னேக் கொணர்ந்து நீ விடுத்த
இந்த உலகில், உனேமறந்தே
இன்பங் காண்பேன்; இதுகாணும்
இன்பந்தாஞே உனதின்பம்?

## 104

'உன் ஆற்றலைப் பற்றி எவ்வளவோ பெருமையடித்துக் கொள்கிறாயே! மனிதனே, உன்னால் அரும்பொன்றை மலராக்க முடியுமா? அது அவனாலேயே முடியும்.'

அரும்பை அவிழ்த்து மலராக்க
ஆகா துன்னால் ஆகாது.
திரும்பத் திரும்ப உன்கையால்
திருகி மாசு படுத்திடலாம்.
அரும்பும் இதழைப் பிய்த்திடலாம்,
அவற்றை மண்ணில் உதிர்த்திடலாம்;
அரும்பில் மலரின் நறுமணமோ
அழகோ கொணர இயலாது.

அரும்பை அவிழ்த்து மலராக்கும்
அவனே மிகவும் எளிதாக
திரும்பிப் பார்க்கும் முன் அதனைச்
செய்து முடிப்பான்; கடைக்கண்ணால்
அரும்பைப் பார்ப்பான்; பார்த்தவுடன்
அதனுள் நரம்பில் உயிர் ஊறும்.
அரும்பும் தனது சிறகு விரித்து
அலராய்க் காற்றில் நடனமிடும்.

## 105

'இறைவனே, உன் எளிமைக்கு எல்லை இல்லை. உன் இசை என்னை வந்தடையும் நாளை எதிர்நோக்கி, எவ்வளவு வேண்டுமானாலும் காத்திருப்பேன்.'

எல்லையில் உன்சொல் எளிமையாய் அமையும்
இறைவனே, இங்குனைப் பற்றிச்
சொல்லிலே பலவாய் முழக்குவார் இவர்தம்
சொல்லில் அவ் வெளிமையைக் காணேன்.
அல்லினிற் சுடரும் தாரகைக் குரலும்
ஆடும் இம் மரங்களின் மோனச்
சொல்லும் என் சிந்தை தோய்வுறும். அந்தச்
சொல்லெலாம் எளிமையின் எளிமை.

வண்ணமென் மலராய் விரியும் என் இதயம்;
வரம்பிலா மறைவில் எங்கிருந்தோ
தண்ணெனப் பெருகும் சுனையில் என் வாழ்வு
தழைக்கும், உன் நிறைவினில் தவழும்.
வெண்பனிக் கொடுமைப் பாலையாய் வெறித்த
வீங்கிருள் பாழ்நிலம் விடுத்து,
விண்ணிலே சிறையை விரித்தொளி விழைந்து
விரைந்திடும் குருகினம் போல,

இங்கெனை நோக்கி விரைகுவ உன்தன்
இசையெலாம் என்பதை அறிவேன்.
தங்கி என் நெஞ்ச நிழலிலே, அங்குச்
சாருமென் உயிர் ஒளிக் கனிவில்

இங்கித மாகக் கூடுகள் இழைக்க
உன்னிசை எழுந்தன உணர்வேன்.
இங்கெனே அவை வந்து இணையும் நன்றுளே
எண்ணி நான் இருந்திட இசைவேன்.

## 106

‘காளி, பயங்கரி, எங்கள் தாய்.’

பட்ட களத்தில் திகம்பரியாய் அவள்
பாய்ந்து நடம் புரிவாள்.—வையம்
சுட்டுப் பொசுக்கும் செந்தீயென நாக்கினைத்
தொங்க விட்டுச் சுழல்வாள்.

முட்டிக் கதிரை விண்மீனைத் துடைத்தவள்
மொய்குழல் வான் துழவும்.—மழை
கொட்டிடும் காரென மேனி, செஞ்சோரியின்
கொள்ளையினைப் பொழியும்.

எட்டுத் திசையும் நடுங்கி இடிந்திட
ஏழுலகும் கிழிய—அவள்
வெட்டி நடந்து வந்தாடும் பயங்கரி
வீரி அவள் எங்கள் தாய்.

எங்கள் தாய்—எங்கள் தாய்—
பயங்கரியாம் எங்கள் தாய்.

' தாமரையாகவந்தாய். காணத்தவறினேன். எங்கும் கமழும் மாய மணமாக வந்தாய். எங்கிருந்து வந்தது இந்த மணம், என் மனத்திலிருந்தா, அதுவும் தெரியவில்லை.'

தாமரை பூத்தது பொய்கையிலே—பூத்த
தாமரைப் பூவை நான் காணவில்லை.
தாமரை காணாமல் எங்கேயோ—மனம்
தட்டுத் தடுமாறிச் சென்றதடி.

என்தன் குடலையில் ஒன்றுமில்லை—மலர்
ஏதும் பறித்து நிரப்பவில்லை.
விந்தையாய்த் தாமரை என்தன் முன்னே—இதழ்
வீசிச் சிரித்ததை எண்ணவில்லை.

நெஞ்சினில் ஏதோ ஓர் சோகம் வந்து—கவ்வ
நெட்டைக் கனவினை விட்டெழுந்தேன்.
விள்ளத்தெரியாத மாய மணம்—தென்றல்
மீதில் இழைந்த சுவடு உணர்ந்தேன்.

என்ன மணமோ தெரிய வில்லை—இங்கே
எங்கு முளைத்ததோ தேறவில்லை.
என்னை வதைத்திடும் ஆசையினை—முட்டி
ஏகியது எங்கோ விளங்கவில்லை.

கோடை குலாவிய நெட்டுயிர்ப்போ ?—அது
கொள்ளை இனிமையை அள்ளி வந்தே
தேடித் தேடி என்னைத் தேர்ந்ததுவோ ?—நிறை
தேடிட வா என்றழைத்ததுவோ ?

வந்த இனிமையும் சொந்தமடி—அது
வாய்த்ததும் என்தன் மனத்திலடி.
அந்தரங்கமான உண்மை இஃதை—ஐயோ,
அன்று நான் காணவே இல்லையடி.

‘ வரம்பு கடந்த ஏதோ ஒன்றைத் தேடி சஞ்சலப்படுகிறேன். அது என்னை அழைக்கிறது, ஆனால் கைக்கு எட்டவில்லை.’

சஞ்சலப்பட்டுத் தவிக்கிறேன்—தொலை
சாரும் எதற்கோ துடிக்கிறேன்.
விஞ்சிடும் ஆசை வெறியினில்—வானம்
மீறும் கரைக்கு நடக்கிறேன்.

யாதும் கடந்து பரந்தவா—இங்கு
யாவையும் விஞ்சி நிறைந்தவா !
நாத மணிக்குழல் ஊதியே—இதோ
நானெனக் கூவி அழைப்பவா !

பந்தத்தில் கட்டுண்டு மண்ணிலே—என்றும்
பாவி முடங்கிக் கிடக்கிறேன்.
முந்திப் பறக்கச் சிறகில்லை—இது
முற்றும் மறந்து துடிக்கிறேன்.

அன்னியனாய் இங்கு நிற்கிறேன்—ஓங்கும்
ஆசை விழிப்பினில்; உன்குரல்
என்னைத் தெருட்டி இரகசியம்—அருள்
இங்கிதம் நம்பித் தளிர்க்கிறேன்.

கூட வொண்ணா நெடுஞ் சேணுளாய்—குழல்
கூட்டியே என்னை அழைப்பவா !
தேடி வரும் குரல் உன்னதை—உளம்
தேறிடும் தன்குரலாகவே.

எந்த வழியெனத் தேர்கிலேன்—வானில்
ஏறிச் சிறகு விரித்தங்கே
முந்தும் பரியொன்றும் பெற்றிலேன்—இதை
முற்றும் மறந்து துடிக்கிறேன்.

மின்னும் வெய்யில் நீல மங்கலில்—வானில்
மேவும் உன் கற்பனை ஓர்கிலேன்.
என்னுளம் தன்னில் அலைகிறேன்—சோம்பி
ஏதோ மலைத்துக் குலைகிறேன்.

முன்னும் முடிவு கடந்திங்கே—ஒரு
மூல முடிவென நிற்பவா !
என்னை மணிக்குரல் மூட்டியே—குழல்
ஏழிசை மூட்டி அழைப்பவா !

தங்கி இந்தக் குடில் தன்னிலே—ஏழை
தன்னந் தனியன் கிடக்கிறேன்.
எங்கும் கதவம் அடைந்தன—இஃதை
எண்ண மறந்து துடிக்கிறேன்.

## 109

'உலகுக் கெல்லாம் அரசன் ஊருக்கு வருவதாவது என்று உறங்கிக் கிடந்தோம். நள்ளிரவில் இருளூடே அவன் வந்தான், மழையும், இடியும், மின்னலும் கட்டியம் கூற. என்ன செய்வது என்று பதைத்தோம். வெறுங்கையோடு அவனை வரவேற்றோம்.'

இரவிருண்டது. பகலில் இருந்த
வேலை யெல்லாம் முடிந்தது. கடைசி
விருந்தினராக வர இருந்தவரும்
வந்து சேர்ந்தனர். இனிமேல் இரவில்
வரப்போவது யார் என்றே நினைத்தோம்.
கதவெலாம் அடைந்தன. ஊரும் அடங்கியது.
ஒருசிலர் மட்டும், 'அரசன் வரலாம்'
என்றனர். நகைத்தோம். நல்ல வேடிக்கை,
அரசனாவது வருவதாவது!

கதவை யாரோ தட்டுவதுபோல்
இருந்தது. 'ஒன்றுமில்லை. காற்றாகத்தான்
இருக்கும்' என்றோம். விளக்கை அணைத்தோம்.
படுத்தோம். ஒரு சிலர் மட்டும் 'காற்று,
இல்லை. தூதன் யாரோ வந்து
கதவை இடிக்கிறான்' என்றனர். நாங்களோ
'காற்றுத்தான் அது' என்று நகைத்தோம்.

நட்ட நடுநிசி வேளையில், ஏதோ
சத்தம் கேட்டது. எங்களுக்கோ ஒரே
தூக்கக் கலக்கம். தொலைவில் எங்கோ
இடி இடிக்கிறதென எண்ணினோம். ஆனால்
பூமி அதிர்ந்தது. சுவர்கள் குலுங்கின.
உறங்கும் எம்மையும் உறுத்தியது அவ்வொலி.
ஒருசிலர் மட்டும் 'தேர்வரும் சத்தம்'
என்றனர். எங்களுக்கிருந்த தூக்கத்தில்,
'அதெல்லாம் இல்லை. இடியின் குமுறல்'
என்று முனகினோம். புரண்டு படுத்தோம்.

இரவிருள் இன்னும் விலகவில்லை;
அந்த நேரத்தில் அதிர்ந்தது முரசு.
'கண்விழித்தெழுங்கள். இனியும் காலம்
தாழ்த்த வேண்டாம்' என்றதோர் குரல்.
அஞ்சி நடுங்கினோம். நெஞ்சினைக் கையால்
அழுத்திப் பிடித்தோம். யாரோ ஒரு சிலர்
அதோ பார், அரசன் மணிக்கொடி' என்றனர்.
எழுந்து நின்றோம், பதறினோம். 'இனிமேல்
நேரம் இல்லை. இனியும் மெனக்கட
நேரமே இல்லை' என்று கூவினோம்.

வந்தான், வந்தான் மன்னவன். ஆனால்
மாலைகள் எங்கே, மணிவிளக் கெங்கே?
அவன் வந்து அமர அரியணை எங்கே?
ஐயோ, வெட்கம், ஒன்றுமே இல்லையே!

மண்டபம், தோரணம், மலர் அலங்காரம்,
என்ன கேவலம், ஒன்றுமே இல்லையே!
ஆனால் இருங்கள். என்றே யாரோ
சொல்ல வில்லையா? வெற்றுக் கூச்சலாற்
பயனில்லை. வெறுங்கையுடன் அவனை
வரவேற்போம். நம்சிறுகுடில் வெறுமையில்
ஐயனே, வா என அழைத்துச் செல்வோம்.
கதவை எல்லாம் திறந்திடு. சங்கை
எடுத்து முழக்கிடு. இறைவன் வந்தான்.

இரவின் நடுவிலே, இருண்டுகிடந்த நம்
வெறுமை வீட்டுக்கு இறைவன் வந்தான்.
வானிலே பேரிடி குமுறிடும். இருளோ
மின்னல் வீச்சிலே மேனி நடுங்கிடும்.
யாரடா, உனது கிழிந்த பாயை
எடுத்துவா, முற்ற வெளியிலே பரப்பு.
இறைவன் வந்தான்; திடுமெனப் புயலுடன்
வந்தான் பயங்கர நிசியின் இறைவன்.

## 110

'அலகில்லாப் பெருங்காதல் ஒருவா, எங்கே இருக்கிறாய்? எல்லோருக்கும் பின்புறத்தில் எங்கே ஒளிந்து கொள்கிறாய்? உன்னை ஒருவரும் மதிப்பதாகத் தெரியவில்லையே! உனக்காகச் சாலை ஓரத்தில் காத்து நிற்கும் என்னையும் இழிவாகக் கருதுகிறார்களே! என்று வருவாய், எப்படி வருவாய் என்றெல்லாம் குருட்டுக் கனவு கண்டு அழிகிறேன். காலமோ கழிகிறது.'

எங்கே இருக்கிறாய், காதல, நீயும் இங்கு
 எங்கே இருக்கிறாயோ?
எல்லோர்க்கும் பின்புறம் இருளடர் நிழலிலே
 எங்குதான் ஒளிகிறாயோ?
எங்குமே புழுதி இச்சாலையில் செல்பவர்
 எளியரின் எளியரென்ன
எண்ணுவார் உன்னையும், இடித்துனைத் தள்ளுவார்,
 எற்றிக் கடந்து செல்வார்.
இங்குநான் உனக்கெனக் கொணர்ந்த நிவேதனம்
 எடுத்துப் பரப்பி வைத்தேன்;
எத்தனை எத்தனை போகாத நாழிகை
 போக்கிக் களைத் தலந்தேன்!
இங்கிதோ வருவாரும் போவாரும் என்கையில்
 உள்ள தொவ்வொன்றாகவே
எடுத்தனர், சென்றனர்; என்சிறு கூடையில்
 எஞ்சியது ஏதும் இல்லை.

காலையும் உச்சியும் கழிந்தன. கங்குலின்
கருமை படர்ந்ததிங்கே;
கண்ணிலே கவிந்தது தூக்கத்தின் கள்வெறி;
கனத்திமை செருகி மூடும்.
சாலையில் வீட்டிற்கு விரைகின்ற ஆடவர்
சாடையாய் என்னை நோக்கி
சந்தேகமாகவே சிரிக்கிறார்; வெட்கமும்
தாங்கவே முடியவில்லை.
சேலைத் தலைப்பினால் என்முகம் மூடுவேன்,
தெருப்பிச்சைக் காரியென்ன,
செல்பவர் கண்ணிற் படாமல் ஒதுங்கியே
சிறுமூலை தனில் இருப்பேன்.
ஏலா, நீ வேண்டுவதும் ஏதடி சொல்லென
என்னென்னவோ கேட்கிறார்;
என்ன நான் சொல்லுவேன், ஏதும் உரையாமலே
என்விழிகள் தாழ்த்தி நிற்பேன்.

உன்றனுக் காகவே காத்துளேன் என்பதும்,
ஒருவன் நீ வருவதாக
உரைத்தனை உறுதியாய் என்பதும், அவர்க்கு நான்
உணர்த்த எவ்வாறு முடியும்?
என்றனுக்காக நான் எடுத்துள சீதனம்
என்வறுமை யன்றி இல்லை.
இதனை நான் பிறரிடம் வெட்கமில்லாமலே
எப்படிச் சொல்ல முடியும்?

உன்றனை எண்ணுவேன், எண்ணிடும் உரிமையை
ஒருவரும் கண்டிடாமல்,
உள்ளத்தின் ஆழத்தில் ஓங்கிடும் பெருமித
உணர்ச்சியாய் ஒதுக்கி வைப்பேன்.
நின்று புற்றரையிலே நிமிர்த்தி என் விழியினை
நீளவான் வெளி துழாவி
நீயெனைக் காணவே வருகின்ற மகிமையை
நினைந்திங்கு கனவு காண்பேன்.

மன்னிவரு தென்றலில் ஆடித் துடித்திடும்
மலர்ச்சிறு கொடி யென்னவே
மண்ணிலே கந்தையைக் கட்டித் துடித்துளம்
மயங்கும் இப்பிச்சை மகளை
துன்னிட வெட்கமும் பெருமிதமும், துணையின்றித்
துவள்கின்ற பேதை இவளைத்
துச்சமாய்த் தள்ளாமல் தோன்றலே நீ உனது
தோழியென்று அணைக்க வருவாய்.
பொன்சுடர் எங்குமே பொங்கிடத் தேரின்மேல்
பொன் கொடிகள் துள்ளி ஆட,
புழுதி இச் சாலையின் மக்களும், காணாத
புதுமையில் வாய் பிளக்க,
பொன்தவிசை விட்டுநீ பொலிவுடன் இறங்குவாய்,
புழுதியில் இருந்தென்னையும்
புண்ணியக் கரத்தினால் தூக்கி உன் பக்கத்தில்
பொற்றேரில் வைத்தருளுவாய்.

காலமும் தேய்ந்தது; என் கனவெலாம் ஓய்ந்தது;
கனகவான் தேரின்மிசை நீ
கடுகிவரும் ஓசையும் காதிலே விழவில்லை;
கருத்திலே உறுதி இல்லை.
சாலையில் ஓயாத சத்தமிட்டே வென்றித்
தற்பெருமை விஞ்சி ஒளிர,
சந்ததமும் ஊர்வலம் ஆயிரம் ஆயிரம்
சாய்வதைக் கண்டு நிற்பேன்.
ஓலமாய் ஓங்கிடும் இவ்வுலாக் கடலிலே,
ஒருவனே, நீ மட்டுமே
உருத்தெரியாமலே மோனமாய் இருளிலே
ஒதுங்கிடவும் வேண்டுமோ, சொல்.
காலையிலிருந்து கண்ணீர் சொரிந்தே மிகக்
கலங்கியே அழுது காத்துக்
காத்துனக் காகவே ஒருத்தி நான் மட்டுமே
கருத்தழிய வேண்டுமோ, சொல்.

‘ஆண்டவனே, ஏழையர், தாழ்ந்தவர், இழிந்தவர், இவர்கள் உள்ள இடமல்லவா உன் பாதபீடம்! இந்த ஒப்பற்ற எளிமையின் அளவுக்கு, உன்னைப்போல நானும் தாழ்ந்து நின்றால் அல்லவா, என்னால் உன்னைத் தொடமுடியும்?’

ஏழையரும், ஏதலரும், இழிந்தோர் தாமும்
இருக்கின்ற இடமே உன் பாதபீடம்.
பாழாம் அந் நெடும்பள்ளத்து இறங்கி உன்தன்
பாதமலர் பதியும் இருள் ஆழந் தன்னில்,
தாழ என்தன் தலைதாழ்த்த எண்ணுவேன், என்
தருக்கு அந்த எளிமைக்குத் தாழாது, ஐயா!
ஏழையரும், ஏதலரும், இழிந்தோர் தாமும்
இருக்கும் இடம் அதுவே உன் பாதபீடம்.

ஏழையரும், ஏதலரும், இழிந்தோர் தாமும்
இரந்துடுத்தும் கந்தலே உன் ஆடையாக,
தோழமை பூண்டு அகதியரைத் தொடரும் உன்தன்
சுலபத்தை என் செருக்கால் தொடவும் போமோ?
பாழாம் என் சிறுஉளமும் உன்னை அங்கே
பார்க்கவரும் பாதையினிற் படிவ தாமோ?
ஏழையரும், ஏதலரும், இழிந்தோர் தாமும்
இருக்கும் இடம், ஐயா, உன் பாத பீடம்.

## 112

'அவர்கள் யாரோ, எனக்கு உதவியாக அடங்கி இருக்க ஒப்புக்கொண்டார்கள். ஆனால் நான் இறைவனுக்கு அமைத்த கோயில் உள்ளே, இரவில், நான் அயர்ந்திருந்த வேளையில், அவர்கள் புகுந்து சூறையாடினார்கள்' என்கிறார் கவிஞர். யாரைக் குறிப்பிடுகிறார், உருவகமாகத் தமது புலன்களையா, பொறிகளையா?

காலையிலே என்வீட்டுக் குள்ளே புகுந்து, 'இந்த
மூலையிலே மட்டும் முடங்கிடுவோம்' என்றுரைத்தார்.
'ஆண்டவனை நீ வணங்கும்போது உன் அருகிருப்போம்;
வேண்டும் உதவி செய்வோம்; வேறே தவறு செய்யோம்;
போதும் என்ற உள்ளப் பொறையோடு இருப்போம்; பின்
ஏதோ அவன் அருளில் ஏற்போம் கிடைத்ததனை'
என்றே உரைத்தார்; இருந்த சிறுமூலை
தன்னில் ஒடுங்கி வணங்கிச் சமைந்திருந்தார்.
ஆனால், இரவின் இருளில், இறைவனுக்கே
ஆன என் கோயில் உள்ளே, ஐயோ புகுந்திட்டார்;
ஓயாத பூசல் உடற்றி, அடங்காமல்,
பேயாக ஆடிப் பெரிதும் தடித்திட்டார்;
ஆராத பேராசைக் கை நீட்டி, என்னுடைய
ஆராதனைப் பொருள்கள் அத்தனையும் சூறையிட்டார்.

## 113

'ஒளியும் நிழலும் ஆடுகின்ற நீண்ட நெடும்பாதை இவ்வுலகம். இங்கே, என்றேனும் ஒரு நாள் எனக்கும் விடிவு வரும், அவனைக் காணலாம் என்ற உறுதியோடு, ஏதும் வாய் திறவாமல் காத்திருக்கிறேன்.'

ஓயாது ஒளியும் நிழலும் இங்கே
ஓடிப் பிடித்து விளையாடும்.
காயுங் கோடை கனலும், பின்
கலகலென்ன மழை பொழியும்.
மாயப் பாதை இதன் மருங்கில்
மகிழ்ச்சியோடு காத்திருந்து
வாய் பேசாமல் அமர்ந்திருக்கும்
வாய்ப்பே எனக்கு விளையாட்டு.

ஊரும் பேரும் யாராலும்
உணர ஒண்ணு வான்தூதர்
யாரும் அறியா நாட்டில் உள்ள
இன்பச் செய்தி கொணர்ந்திடுவார்;
பேரைச் சொல்லி எனை அழைப்பார்,
பெயர்த்தும் வானில் விரைந்திடுவார்.
ஆர நெஞ்சம் மகிழ, இங்கே
அலையும் காற்று மணம் தூவும்.

விடிவு முதலாய் அந்திவரை
வீட்டின் முன்னே காத்திருப்பேன்;
படியில் இருந்து சிரித்திருப்பேன்,
பாட்டுப்பாடி மகிழ்ந்திருப்பேன்.

விடியும்; அவனைக் காண்கின்ற
வேளை நொடியில் வருமென்றே
முடிவாய்க் கொண்டேன். இவ்வுறுதி
முகிழ்க்கும் மணமாய் வெளியெங்கும்.

114

அவன் குழலிசை எது? மலர் மணம், தேனீயின் முனகல், நண்பன் ஒருவனுடைய புன்னகை—இவை யெல்லாம் அவன் குழலிசையே. உள்ளமே, கேள்.

உள்ளமே, கேள், அவன் வேய்ங்குழல் தன்னிலே
ஓங்கிவரும் இசையினைக் கேள்:
வெள்ளமாய்க் காட்டுமலர் வீசிடும் புதுமணம்
மின்னும் இலை, மின்னும் அலைகள்;
ஒள்ளிய வனச்சிறகை ஓச்சி, நிழல் நெஞ்சிலே
ஒலிமாயம் உணர்த்து தேனீ;
அள்ளி என் நண்பனது முறுவல் என் வாழ்வில் உற
ஆர அருள்கின்ற கருணை.

## 115

'பிரிவினுல் விளைந்த துன்பந்தான் இங்குள்ள அனுபவத்திற்கெல்லாம் அடித்தலம். அதுவே எங்கும் நிறைந்துள்ளது. என் கவிதையாக வடிவெடுத்துள்ளது.'

பிரிவென்னும் துன்பந்தான் பாரில் எங்கும்
பெருகுவது; வான்வெளியின் எல்லை யற்ற
விரிவினிலே எண்ணற்ற வடிவம் தம்மை
விளைப்பதது; மோனத்தில், இரவு முற்றும்
ஒருவான்மீன் தனிலிருந்து மற்ருேர் மீனை
இமையாமல் நோக்குவதும் பிரிவே; ஆடி
இருள் மழையில் சலசலக்கும் இலைகளூடே
இசைக்கவியாய் மலர்வதும் இப்பிரிவேயாகும்.

எங்கெங்கும் பரவும் இந்தப் பிரிவின் துன்பம்
ஏறும் அன்பாய் ஆசையதாய் ஏறும்; பின்னர்
இங்குள்ள மனிதர்தம் வீட்டிற் காணும்
எண்ணற்ற வேதனையாய் இன்ப மாகப்
பொங்கிவரும்; இப்பிரிவாம் துயரே விம்மிப்
புகுந்தெனது கவிநெஞ்சிற் பொருந்தும்; அங்கே
தங்கியெனை உருக்கும், பின் பாடலாகித்
தழைத்தென்றும் வெள்ளமாகப் பெருகி ஓடும்.

'இறைவனே, உன்னுடைய ஒளிக்கதிர் என் வீட்டுவாசலுக்கு வந்து, என்துயரானலான இருட்புயலை உன்திருவடிக்குத் தூக்கிச் செல்கிறது. அதனை, அந்தப் பேதைமை நிழலை, நீ சால்வையாகப் போர்த்திக் கொள்கிறாய். அந்தக் கந்தலை, உன் தூய வெண்மை ஒளியை யெல்லாம் மறைக்கும்படி விடுகிறாய்.'

உன்தன் வெயிற்கதிர் ஓடிவந் திம்மண்ணை
ஓங்கும் கரம் விரித்தே அணைக்கும்;
என்தன் சிறுவீட்டு வாசலின் முன்னே
எப்போதும் கைகட்டிக் காத்து நிற்கும்.

என்தன் கண்ணீரும் புலம்பலும் பாடலும்
ஏன்று சமைத்த இருட்புயலை,
உன்தன் திருவடி நீழலில் சேர்த்திட
ஊக்கத்துடன் தூக்கித் துள்ளி எழும்.

இந்த இருட்புயல்-சால்வையை நீயும்
ஏற்றிடுவாய், வானமீன் பதிந்து
மின்னும் உன் மார்பில் அணிந்திடுவாய், அன்பு
மீறும் களிப்புப் பெருக்கினிலே.

எத்தனையோ விதமாக மடிப்பாய்; என்
எண்ணங் கடந்த வடிவமைப்பாய்;
நித்தமும் மாறிடும் வண்ணங்கள் ஆயிரம்
நீளவே பெய்து நிறைத்து வைப்பாய்.

தொட்டால் சுருங்கிடும் நொய்மையது, துயர்
தோய்ந்த கண்ணீரால் சூழ்ந்ததது;
விட்டால் கணத்தினில் வீழுமது, காரின்
விஞ்சும் இருள் வண்ணப் பஞ்சையது.

இந்த வகையில் இருப்பதனுல்தான்
இச்சிறு கந்தைத் துணுக்கிணையும்
எந்தாய், நீ ஏற்க விரும்புகிருயோ
எல்லையில்லாத பரிவுடனே?

மாசு மறுவற்ற நின்மலனே, உன்தன்
மாய வெண்மையொளிப் பாரையெலாம்
தூசுபடிந்த இப்பேதைமை நீழலும்
சுற்றி மறைத்திட விட்டு நிற்பாய்:

## 117

'இறைவனே, இரவில் உன்னேடு இருந்தேன். உன் மார்பில் புரண்ட மலர் மாலையைக் கேட்டுப்பெற நினைத்தேன். நா எழவில்லை, காலையில், நீ போனபிறகு, தேடிப்பார்த்தேன், ஏதாவது உதிர்ந்த மலராவது கிடைக்கும் என்று. ஆனல் கொடுமையான உன் வாளைத்தான் கண்டேன். உன் பயங்கர மான சின்னம் அது; அதுவே எனக்கு அலங்காரம்; அதுவே துணை.'

உன்தன் மார்பில் புரண்ட மலர்
மாலை தன்னை எனக்கே நீ
தந்து செல்லும் வரம் கேட்கத்
தவித்தேன்; ஆனல் அதற்கான
சிந்தைத் துணிவோ இல்லை; நீ
சென்ற பிறகு, காலையிலே,
சிந்திக் கிடக்கும் பூவேனும்
திரட்ட எண்ணிக் காத்திருந்தேன்.

காலை வந்தது; நீ போனய்.
கருக்கல் ஒளியில் படுக்கையிலே
மாலை இல்லை. என்ருலும்
மற்றிங் கெனக்குப் பிய்ந்தமலர்
நாலோ ஐந்தோ கிடைக்குமென
நம்பிப் பிச்சைக் காரியைப்போல்
மூலைகூட விடாது மஞ்சம்
முற்றுந் துழவித் துழவி நின்றேன்.

ஐயோ, கண்டதென்ன? உன்தன்
அன்பைக் காட்டும் அறிகுறியாய்,
செய்ய மலரோ மருக்கொழுந்தோ
இல்லை; அதற்கு மாறுக,
வெய்ய கனலாய், இடிவிறலாய்,
விளங்கும் உன்தன் வாள்கண்டேன்.
ஐயா, எனக்கு நீ தந்த
அன்பின் சின்னம் இதுவேயோ?

காலைக் கன்னி ஒளி இங்கே
கடுகி வந்துன் படுக்கைமேல்
ஆலும்; ‘அடியே, பெண்ணே, நீ
அடைந்த பரிசும் ஏது’என்ன,
காலைக் குருவி கலகலக்கும்;
கள்ளார் மலரோ மணப்பொருளோ
கோலப் பரிசாய்ப் பெறவில்லை;
கொண்டது உன்தன் கொடுவாளே.

என்ன பரிசோ இதுவுமென
எண்ணி எண்ணி மயங்கிடுவேன்.
என்தன் வீட்டில் இதை ஒளிக்க
இடமில்லாது கலங்கிடுவேன்.
விந்தையாக அதை அணிய
வெட்கம் குறுக்கே நிற்கிறது.
என்தன் மார்பில் அணைத்தாலோ
என்னைக் குத்தி வதைக்கிறது.

ஆனால் துன்பச் சுமையிதை நீ
அன்பாய் அளித்த பேருக,
நானும் எனது நெஞ்சினிலே
நாளுந் தாங்கிப் பூரிப்பேன்.
ஆறு இந்த மண்ணில் இனி
அச்சம் ஏதும் எனக்கில்லை.
ஆன முயற்சி அனைத்திலும் நான்
அடையும் வெற்றி உனதேதான்.

சாவை எனது தோழனெனத்
தந்து சென்றாய்; நீ தந்த
சாவுக்கு என்தன் உயிராலே
சமைப்பேன் ஒளிருந் தனிமகுடம்.
மேவும் தளைகள் அத்தனையும்
வெட்ட உனது வாளுண்டு.
ஆவ தாகுக! இவ் வுலகில்
அச்சம் ஏதும் எனக்கில்லை.

சின்னஞ் சிறிய சிங்காரம்
செய்து கொளும் அச் சிறுமையினை
இன்று முதலாய்க் கைவிட்டேன்.
இனிமேல் ஒதுங்கி மூலையிலே
நின்று தயங்கிக் காத்திருக்கும்
நிலைமை ஒன்றும் எனக்கில்லை.
என்தன் இதயத் தரசே, நான்
எதற்கும் புழுங்கத் தேவையில்லை.

பெண்ணுய்ப் பிறந்த அதனுலே
பெரிதும் நாணும் பேதைமையும்,
எண்ணி இனிய முகங்காட்டி
இழையுங் குழைவும் எனக்கில்லை.
வண்ணப் பொம்மை போல் அணிகள்
வாரிச் சுமப்பது இனி இல்லை.
அண்ணலே, உன் வாள் தந்தாய்;
அதுவே என்தன் அணியெல்லாம்.



T. P.—18

## 118

'பிரிந்து செல்லும் வேளை வந்து விட்டது. கடைசியாக ஒரு முறை என்னை வாழ்த்துங்கள். அச்சம் ஏதுமின்றி, மகிழ்ச்சியோடு போகிறேன், இறைவனுடைய நெடுவாசலுக்கு.'

பிரிந்து செல்லப் போகுமிந்த வேளையிலே, ஆரப்
பரிந்தென்னை 'வாழி' யென வாழ்த்துங்கள், பாங்குடையீர்.
வானம் சிவந்தது, வந்ததிதோ வைகறையும்
ஆன நெடும்பாதை அழகாய் அலர்ந்த தென்முன்.
என்ன நான் கையில் எடுத்தங்கே போகின்றேன்
என்றென்னை நீங்கள் ஏதும் வினவாதீர்.
ஏதுமில்லாக் கைவீசி ஏதோ எதிர்நோக்கும்
காதல் உளங் துள்ளக் கடுகி வழி நடப்பேன்.
காவி உடைதரியேன்; காட்டு வழி நடுவே
மேவும் இடரெண்ணி வெருவேன்; மணமாலை
சூடி நடப்பேன்; சுடரும் அந்தி வான வெள்ளி
ஓடி வரும் என் பயணம் ஓய்ந்தவுடன்; இறைவன்
விந்தை நெடுவாசல் வீச்சில் நிமிர் மேளம்
அந்தி இசைச் சோக அடைவு பரிமாறும்.

## 119

‘ போகிறேன். அன்பாகப்பேசி வழி அனுப்புங்கள்.’

போகிறேன், சோதரரே, போக விடை கொடுங்கள்.
போகுமுன் உங்களை நான் போற்றி வணங்குகிறேன்.
வீட்டுக் கதவிதன் சாவி இதோ வைத்துவிட்டேன்;
வீட்டில் உரிமை எனக்கு ஏதுமில்லை. விட்டு விட்டேன்
அன்பாகப் பேசி அனுப்பினால் போதும்; ஏதோ
ஒன்றாய் இருந்தோம் பலகாலம். உங்களிடம்
கோடியே பெற்றேன், கொடுத்ததோ ஒன்றுமில்லை.
ஓடி எங்கோ வா என்ன உற்றதிங்கே உத்தரவு.
காலை புலர்ந்தது. காண ஒளி தந்த இருள்
மூலை விளக்கு முடிந்ததிதோ போகின்றேன்.

## 120

‘கடைசிப் பயணம்; இதோ கடலில் என் படகு ஏறுந் தருணம்; இறைவனே, என் மீகானே, என் படகைச் செலுத்திக் கரையேற்று.’

சாந்திக் கடலும் சார்ந்தது எதிரே;
தருணம் இதுவே, மீகானே.
ஏந்திப் படகைக் கடலில் விடுவாய்,
இதுவே தருணம், மீகானே.

நின்று துருவத் தாரகை மின்னும்
நீண்ட அகண்டப் பாதையிலே,
என்றும் பிரியாத் துணைவன் நீயே;
இவனைத் தாங்கு உன் மடியினிலே.

விடுதலை தருவாய், உன் மன்னிப்பும்
விலகா உனது கருணையுமே
நெடிய அமர யாத்திரை இதனில்
நிதமும் பெருகும் நிறை நிதியம்.

மரணத் தளைகள் மடிக, விசுவ
மண்டலம் இவனை அணைத்திடுக!
கரணம் கடந்த காரணத்தை இவன்
கலங்கா நெஞ்சம் கண்டிடுக!

## மூலப்பாடல்களின் அட்டவணை

மொழி பெயர்ப்பு பொதுவாக ஆங்கில மூலத்திலிருந்து செய்யப் பெற்றது. ஒவ்வொரு பாட்டின் மூலமும் உள்ள ஆங்கில நூலையும், அங்கே பாடலுக்குள்ள எண்ணையும் கீழே குறித்திருக்கிறோம். ஆனால் பல பாடல்களின் மொழி பெயர்ப்பு வங்க மொழியில் உள்ள மூலத்தையும் ஒப்பு நோக்கி வடிவாக்கப் பெற்றது என்பதை நினைவுக்குக் கொண்டு வருகிறோம்.

| மொழிபெயர்ப்பு: பாடல் எண் | மூலம்: | | நூலும், பாடல் எண்ணும் | |
|---|---|---|---|---|
| 1. | The Crescent Moon | : | வளர் பிறை | : 7 |
| 2. | ,, ,, | : | ,, ,, | : 9 |
| 3. | ,, ,, | : | ,, ,, | 39 |
| 4. | ,, ,, | : | ,, ,, | : 40 |
| 5. | ,, ,, | : | ,, ,, | : 8 |
| 6. | Gitanjali | : | கீதாஞ்சலி | : 61 |
| 7. | The Crescent Moon | : | வளர் பிறை | : 10 |
| 8. | ,, ,, | : | ,, ,, | : 14 |
| 9. | ,, ,, | : | ,, ,, | : 13 |
| 10. | ,, ,, | : | ,, ,, | : 28 |
| 11. | ,, ,, | : | ,, ,, | : 15 |
| 12. | ,, ,, | : | ,, ,, | : 29 |
| 13. | ,, ,, | : | ,, ,, | : 6 |
| 14. | ,, ,, | : | ,, ,, | : 32 |
| 15. | ,, ,, | : | ,, ,, | : 36 |

| மொழிபெயர்ப்பு: பாடல் எண் | மூலம்: | | நூலும், பாடல் எண்ணும் | | |
|---|---|---|---|---|---|
| 16. | The Gardener | : | தோட்டக்காரன் | : | 32 |
| 17. | ,, ,, | : | ,, ,, | : | 11 |
| 18. | ,, ,, | : | ,, ,, | : | 7 |
| 19. | ,, ,, | : | ,, ,, | : | 20 |
| 20. | Sanyasi | : | சந்நியாசி (நாடகம்) | | |
| 21. | The Gardener | : | தோட்டக்காரன் | : | 19 |
| 22. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் | | 4 |
| 23. | The Gardener | : | தோட்டக்காரன் | : | 31 |
| 24. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் | | 70 |
| 25. | The Gardener | : | தோட்டக்காரன் | : | 46 |
| 26. | ,, ,, | : | ,, ,, | : | 22 |
| 27. | ,, ,, | : | ,, ,, | : | 28 |
| 28. | ,, ,, | : | ,, ,, | : | 59 |
| 29. | ,, ,, | : | ,, ,, | : | 9 |
| 30. | ,, ,, | : | ,, ,, | : | 49 |
| 31. | ,, ,, | : | ,, ,, | : | 48 |
| 32. | ,, ,, | : | ,, ,, | : | 34 |
| 33. | Fruit Gathering | : | கனிதிரட்டல் | : | 25 |
| 34. | ,, ,, | : | ,, ,, | : | 42 |
| 35. | The Crescent Moon | : | வளர்பிறை | : | 18 |
| 36. | ,, ,, | : | ,, ,, | : | 34 |
| 37. | The Gardener | : | தோட்டக்காரன் | : | 84 |
| 38. | ,, ,, | : | ,, ,, | : | 85 |
| 39. | Gitanjali | : | கீதாஞ்சலி | : | 96 |
| 40. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் | | 44 |

| மொழிபெயர்ப்பு: பாடல் எண் | மூலம்: | | நூலும், பாடல் எண்ணும் |
|---|---|---|---|
| 41. | வங்க மொழியில் உள்ள மூலத்திலிருந்து | | |
| 42. | Mukta Dhara | | முக்ததாரா (நாடகம்) |
| 43. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் 47 |
| 44. | ,, ,, | : | ,, ,, : 30 |
| 45. | ,, ,, | : | ,, ,, : 120 |
| 46. | ,, ,, | : | ,, ,, : 65 |
| 47. | ,, ,, | : | ,, ,, : 73 |
| 48. | ,, ,, | : | ,, ,, : 10 |
| 49. | ,, ,, | : | ,, ,, : 119 |
| 50. | ,, ,, | : | ,, ,, : 14 |
| 51. | ,, ,, | : | ,, ,, : 54 |
| 52. | Gitanjali | : | கீதாஞ்சலி : 21 |
| 53. | ,, | : | ,, : 74 |
| 54. | ,, | : | ,, : 90 |
| 55. | ,, | : | ,, : 91 |
| 56. | ,, | : | ,, : 92 |
| 57. | ,, | : | ,, : 95 |
| 58. | ,, | : | ,, : 100 |
| 59. | ,, | : | ,, : 12 |
| 60. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் 8 |
| 61. | The Gardener | : | தோட்டக்காரன் : 78 |
| 62. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் 103 |
| 63. | ,, ,, | : | ,, ,, : 98 |
| 64. | ,, ,, | : | ,, ,, : 38 |
| 65. | Gitanjali | : | கீதாஞ்சலி : 35 |

| மொழிபெயர்ப்பு: பாடல் எண் | மூலம்: | | நூலும், பாடல் எண்ணும் | |
|---|---|---|---|---|
| 66. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் | 71 |
| 67. | ,, ,, | : | ,, ,, | : 83 |
| 68. | Gitanjali | : | கீதாஞ்சலி | : 88 |
| 69. | The Gardener | : | தோட்டக்காரன் | : 6 |
| 70. | ,, ,, | : | ,, ,, | : 52 |
| 71. | ,, ,, | : | ,, ,, | : 75 |
| 72. | ,, ,, | : | ,, ,, | : 57 |
| 73. | ,, ,, | : | ,, ,, | : 69 |
| 74. | ,, ,, | : | ,, ,, | : 67 |
| 75. | Gitanjali | : | கீதாஞ்சலி | : 103 |
| 76. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் | 77 |
| 77. | ,, ,, | : | ,, ,, | : 51 |
| 78. | ,, ,, | : | ,, ,, | : 25 |
| 79. | ,, ,, | : | ,, ,, | : 84 |
| 80. | ,, ,, | : | ,, ,, | : 82 |
| 81. | ,, ,, | : | ,, ,, | : 107 |
| 82. | Gitanjali | : | கீதாஞ்சலி | : 6 |
| 83. | ,, | : | ,, | : 45 |
| 84. | ,, | : | ,, | : 2 |
| 85. | ,, | : | ,, | : 4 |
| 86. | ,, | : | ,, | : 5 |
| 87. | ,, | : | ,, | : 3 |
| 88. | ,, | : | ,, | : 11 |
| 89. | ,, | : | ,, | : 17 |
| 90. | ,, | : | ,, | : 18 |

| மொழிபெயர்ப்பு: பாடல் எண் | மூலம்: | | நூலும், பாடல் எண்ணும் | | | |
|---|---|---|---|---|---|---|
| 91. | Gitanjali | : | கீதாஞ்சலி | | : | 19 |
| 92. | ,, ,, | : | ,, | ,, | : | 13 |
| 93. | ,, ,, | : | ,, | ,, | : | 15 |
| 94. | ,, ,, | : | ,, | ,, | : | 26 |
| 95. | ,, ,, | : | ,, | ,, | : | 30 |
| 96. | ,, ,, | : | ,, | ,, | : | 36 |
| 97. | ,, ,, | : | ,, | ,, | : | 48 |
| 98. | ,, ,, | : | ,, | ,, | : | 67 |
| 99. | ,, ,, | : | ,, | ,, | : | 71 |
| 100. | ,, ,, | : | ,, | ,, | : | 102 |
| 101. | ,, ,, | : | ,, | ,, | : | 83 |
| 102. | ,, ,, | : | ,, | ,, | : | 9 |
| 103. | Fruit Gathering | : | கனி திரட்டல் | | : | 75 |
| 104. | ,, ,, | : | ,, | ,, | : | 18 |
| 105. | ,, ,, | : | ,, | ,, | : | 15 |
| 106. | Sacrifice | : | பலி (நாடகம்) | | | |
| 107. | Gitanjali | : | கீதாஞ்சலி | | : | 20 |
| 108. | The Gardener | : | தோட்டக்காரன் | | : | 5 |
| 109. | Gitanjali | : | கீதாஞ்சலி | | : | 51 |
| 110. | ,, ,, | : | ,, | ,, | : | 41 |
| 111. | ,, ,, | : | ,, | ,, | : | 10 |
| 112. | ,, ,, | : | ,, | ,, | : | 33 |
| 113. | ,, ,, | : | ,, | ,, | : | 44 |
| 114. | Fruit Gathering | : | கனி திரட்டல் | | : | 66 |
| 115. | Gitanjali | : | கீதாஞ்சலி | | : | 84 |

| மொழிபெயர்ப்பு: பாடல் எண் | மூலம்: | | நூலும், பாடல் எண்ணும் |
|---|---|---|---|
| 116. | Gitanjali | : | கீதாஞ்சலி : 68 |
| 117. | ,, ,, | : | ,, ,, : 52 |
| 118. | ,, ,, | : | ,, ,, : 94 |
| 119. | ,, ,, | : | ,, ,, : 93 |
| 120. | Poems: Visva Bharati | : | விசுவபாரதி:பாடல்கள் 122 |